# தமிழ் வளர்த்த கோயில்கள்

எம். ராதாகிருஷ்ண பிள்ளை



மங்கள நூலகம்
பிரசுரகர்த்தர்கள்:
நுங்கம்பாக்கம் :: சென்னை-600034

மறு பதிப்பு ; 1971, 73

விலை : 3-25



மங்கள நூலகம்
சென்னை-600034

உள்ளே



அச்சிட்டோர் :
பாலா பிரிண்டர்ஸ்
சென்னை-600034

# சிறப்புரை

மனிதருக்குப் பொதுவாக இரண்டு வகையான பசி உண்டு. ஒன்று உடற்பசி; மற்றொன்று உள்ளப்பசி. உடற் பசியைத் தணிப்பது எளிது. உணவுப் பெருக்கத்தால் அதை நீக்கலாம். விஞ்ஞான வளர்ச்சி உணவுப் பெருக்கத்துக்குப் பெரிதும் துணைபுரியும். நாட்டின் வளம் அதிகமானால், மக்களின் பசிப்பிணி ஒழியும். ஆனால், உள்ளப்பசி தீர்வது அவ்வளவு எளிதன்று. நுட்ப உணர்வால் அறியப்படும் இப் பசியைத் தீர்க்கும் சாதனங்களோ மிக மிக நுட்பம் செறிந்தவை. உள்ளப்பசி என்பது மனம், அறிவு, ஆன்மா ஆகியவைப் பற்றிய ஆராய்ச்சிகளால்தான், ஒருவாறு திருப்தி பெறும். ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்ட சூட்சும உணர்வுகளை அடிப்படையாகக் கொண்ட உள்ளப்பசியைத் தீர்க்கும் துறையில், நம் முன்னோர்கள் பன்னெடு நாள் முயன்று, சிறந்த வழி முறைகளைக் கண்டுள்ளனர்.

மக்கள் பேசும் மொழிக்கும், அறிவியல் ஆராய்ச்சிக்கும், ஆன்ம நேய ஒழுக்கத்துக்கும் மிக நெருங்கிய தொடர் புள்ளதை அனுபவத்தில் யாரும் அறியலாம். இதற்கு விளக்கம் தேவை இல்லை. கடவுள் நம்பிக்கையை அடிப் படையாகக் கொண்டு, தமிழ்நாட்டின் கலையும் பண்பாடும் வளர்ந்து வந்துள்ளன. தொல்காப்பியம் முதல், நமக்குக் கிடைத்துள்ள பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களிலிருந்து இதற்கு எத்தனையோ சான்றுகள் காட்டலாம்.

இன்றைய தினம் வரையில், நம் பண்பாட்டின் நிரந்தரச் சான்றுகளாய் விளங்கி வருபவை, நம் நாட்டின் கோயில் களாகும். அவற்றை வந்து காணும் அயல் நாட்டார் யாவரும் அதிசயிக்கும் வண்ணம், நம் முன்னோரின் கலைத் திறனை அவை பறைசாற்றி வருகின்றன. அத்துடன், சமு தாயப் பணியின் சாதனைகளாகவும் திகழ்கின்றன. ஆயினும்,

அவற்றைப் பற்றிய சரியான செய்திகள் பலருக்குத் தெரிய வில்லை. சமீபத்தில் நான் ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றிருந்தபோது, சரித்திரப் பிரசித்திப் பெற்ற வழிபாட்டுத் தலங்கள் சிலவற்றைக் காண நேரிட்டது. ஒவ்வொரு நாட்டிலும் சிறப்பான கலைப்பண்பை வெளியிடும் சாதனங்களாக அவை விளங்குகின்றன. அவற்றைப் பற்றி விளக்கும் அந்தந்த நாட்டு அன்பர்கள் எவ்வளவோ பெருமையுடன் எல்லாத் தகவல்களையும் தக்க சான்றுகளோடு எடுத்துக் கூறுகின்றனர்; கவர்ச்சியான நூல்களும் வெளியிட்டுள்ளனர்.

''தமிழ் வளர்த்த கோயில்கள்'' என்ற இந்த நூலில், தென்னாட்டினுள் இருக்கும் சுமார் பதினைந்து முக்கியக் கோயில்களைப் பற்றிய குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. சரித்திரச் செய்திகள், தமிழ் இலக்கியச் சான்றுகள் முதலியன ஆசிரியரின் ஆராய்ச்சித் திறனைப் புலப்படுத்துகின்றன. யாத்திரிகர்களுக்குத் தேவையான குறிப்புக்களும் தரப்பட்டிருப்பது பாராட்டற் குரியது. சைவம், வைணவம், கிறித்துவம், சமணம் ஆகிய பல்வேறு சமயத்தினர் போற்றும் தலைசிறந்த திருத்தலங்களே இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

தமிழ் நாட்டவர் கிணற்றுத் தவளைகளாக வாழாமல், பல்வேறு இடங்களையும், நாடுகளையும், சமய வேற்றுமையின்றிச் சமரச நோக்கத்தோடு நேரில் கண்டு அனுபவ அறிவு பெற வேண்டும். அதற்கு இத்தகைய நூல்கள் பெரிதும் தூண்டுகோலாக இருக்கும் என்பது என் நம்பிக்கை.

எம். பக்தவத்ஸலம்,
19—9—56.

'தமிழ் வளர்த்த கோயில்கள்' என்ற இந்நூல் தென்னாட்டுப் பிரதான ஆலயங்களைக் குறித்த கட்டுரைகளின் தொகுதியாகும். தமிழும் சமயமும் வளர்த்த கோயில் நாகரிகத்தின் சின்னங்கள் தென்னாடெங்கும் பரவிக் கிடக்கின்றன. அவற்றில் புகுந்து தமிழின் அருமையையும் சமயப் பண்பையும் அறிந்துகொள்ள இக் கட்டுரைகள் ஓரளவு பயன் படுமென எண்ணுகிறேன்.

மா. ராதாகிருஷ்ணன்

*9—11—56*

# திருவரங்கம்

'' ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோ னயோத்தி மன்னர்க் களித்த கோயில்
தோலாத தனி வீரன் தொழுத கோயில்
துணையான வீடணர்க்குத் துணையாங் கோயில்
சேராத பயனெல்லாம் சேர்க்கும் கோயில்
செழு மறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்
தீராத வினை யனைத்தும் தீர்க்குங் கோயில்
திருவரங்க மெனத் திகழுங் கோயில் தானே ''

என்று திருவரங்கப் பெருங் கோயிலை வேதாந்த தேசிகர் பாடினார். மயர் வரமதி நலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் பாடிய தலங்கள் நூற்றெட்டாகும். அவற்றில் ''கோயில்'' என்ற பெயரளவிலேயே குறிக்கப்படுவது திருவரங்கம் என்பது அதன் சிறப்புக்கு ஓர் சான்றாகும். ஆழ்வார்கள் அனைவரா லும் பாடப்பெற்ற தலம் இதுவே. ஆசாரியன்மார் பலர் வாழ்ந்து சம்பிரதாயத்தை வளர்த்த தலமும் இதுவே. பரமா சாரியரான ராமாநுஜர் பெரும் பதம் எய்தியது இங்குதான். வைணவ சமயத்தின் வளர்ப்புப் பண்ணையாகிய இத் தலத்தைப் '' பூலோக வைகுந்தம் '' என்பர் ஆன்றோர்.

அவ்தாரத்தில் தேங்கின மடு அர்ச்சாவதாரம். அவதா ரத்தைப் பெரு மழையாகக் கொண்டால் அந்த மழை நீரைத் தேங்கச்செய்து பின்னாளிலும் ஜனங்களுக்கு உப கரித்துக் கொண்டிருந்த நீர் நிலையாகக் கோயில்களையும், விக்ரகங்களையும் கருதவேண்டும். ஸ்ரீரங்கநாதனை ஸ்ரீரங்க ராஜா என்றும் ஸ்ரீரங்கத்தை அவன் ராஜதானி நகரமென்றும் கூறுவர். கங்கையிலும் புனிதமான உபய காவேரி நடுவே, '' உங்கள் சுமையை என் தலையில் வைத்தாலொழிய எழுந் திரேன் '' என்று சங்கல்பம் செய்துகொண்டு அரவணை விரும்பி அறிதுயில் செய்கிறான் அரங்கன் என்பர். ஆற்றுக் கிடையே அமைந்திருக்கும்,

"வண்டினம் முரலும் சோலை, மயிலினம் ஆலும் சோலை
கொண்டல் மீதணவும் சோலை, குயிலினம் கூவும் சோலை"

யின் இயற்கை அழகு தெய்வீகமாகத் திகழ்கிறது. அந்தத் திவ்ய தலத்தில், "என்னைக் கொள்வாருண்டோ" என்று,

"குடதிசை முடியை வைத்து குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி"

கண்வளர்ந்திருக்கிறான் பெருமான். மேற்குத்திசை வாழும் படித் தன் திருமுடியை வைத்தருளி, உலகமெலாம் போற்றும் திருவடிகளைத் கீழ்த்திசை வாழ அப்பக்கமாக நீட்டிக் கொண்டிருக்கிறான். வடக்குத் திக்கு ஆரிய பூமியாகையாலே, சமஸ்கிருத முரணராய் ஆழ்வார்கள் ஈரச் சொல்லும் நடையாடாத தேசமாகையாலே, அத் திக்கைத் திருத்தும்போது பின்னழகெல்லாம் வேணுமென்றிருந்தார் என்று வியாக்கியானம் கண்டருளுகிறார் வடமொழி எல்லைகண்ட பெரியவாச்சான் பிள்ளை.

சரித்திரக் காலத்திற்கு முற்பட்ட கோயிகளில் மிகப் பழைமையானது ஸ்ரீரங்கம். "கோயிலொழுகு" என்ற ஒரு நூல் ஸ்ரீரங்க நகரின் சரித்திரத்தை, ஆதியிலிருந்து பதினாறும் நூற்றாண்டுவரை ஒருவாறாகக் கூறுகிறது. வால்மீகி ராமாயணத்தில் இத்தலத்தைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. பிரம்மதேவன், சத்திய லோகத்தில் அரங்கனுதனை ஆராதித்து வந்தான். பிரம்மதேவரிடமிருந்து இம் மூர்த்தியை இக்ஷ்வாகு குல அரசர்கள் பெற்று அயோத்தியில் ஆகம விதிப்படி ஆராதித்து வந்தனர். இவ் வரலாற்றினைக் கம்பர் பெருமான்,

"பணியரங்கப் பெரும் பாயற்
பரஞ்சுடரை யாங் காண
அணியரங்கம் தந்தானை
அறியாதார் அறியாதார்."

என்று போற்றுகிறார். இவ் வாராதன மூர்த்தியை ராமபிரான் விபீடணனுக்கு அளித்தார். இலங்கைக்குச் செல்லும் வழியில் விபீடணாழ்வான் இந்த விக்ரகத்தைக் கீழே வைத்து

விட்டுச் சிரம பரிகாரம் செய்துகொள்ள, எம்பெருமான் அவ் விடத்திலேயே (ஸ்ரீரங்கம்) புடை பெயராது சயனித்து விட்டார். விபீடணுழ்வான் எம்பெருமான் விக்ரகத்தை விட்டுச்சென்ற பிறகு தர்மவர்மன் என்ற சோழ அரசன், பெருமாளுக்கு மண்டபம், கோபுரம், புஷ்கரணி முதலிய வற்றை எடுத்து வழிபட்டானென்று கோயிலொழுகு கூறு கிறது. ஆனுல் அந்நூல் கூறும் காலம் கலி சகாப்தம் எது வென்று நிர்ணயம் செய்ய முடியவில்லை. தர்மவர்மன் காலத் திற்குப் பிறகு இரண்டு காவேரிகளில் பெருகிய வெள்ளம் ஆலயத்தை மண்மேடிட்டு மூடிவிட்டன. மண்மேட்டைச் சுற்றிப் புதர்கள் வளர்ந்து கிடந்தன. பிறகு சோழன் கிள்ளி என்ற ஓர் அரசன் தற்செயலாக அங்கே வந்து புதர் நிழலில் இளைப்பாறிக் கொண்டிருந்தான். அப்போது ஒரு கிளி அவனுக்கு ரங்க விமானம் அங்கே உள்ளதை வடமொழி ஸ்லோகத்தின்மூலம் அறிவித்தது. மன்னன் மண்மேட்டைக் கரைத்து ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்தான். இவ்வரசன் காலமும் கணக்கிடமுடியவில்லை. பிறகு ராஜ மகேந்திரன் என்ற அரசன் ஒரு மதில் கட்டியதாகக் கோயி லொழுகு கூறுகிறது.

கி. பி. எட்டாம் நூற்ருண்டவராகக் கருதப்படும் திரு மங்கை மன்னன் ''ஆலிநாடன்'' வீதியில் ஒரு மதிலெடுத் தாரென்று கூறுகிறது கோயிலொழுகு. திருமங்கையாழ்வார் தொண்டரடிப் பொடியாரைச் சந்தித்து, அவருடைய நந்த வனத்தை அழிக்காமல் மதிலைச் சுற்றிக் கட்டினுரென்று, ''குரு பரம்பரை'' வரலாறு கூறுகின்றது.

நம்மாழ்வாருடைய பாசுரங்களை மார்கழி மாதம் அத்யயன உற்சவத்தின்பொழுது வடமொழி வேதங் களோடு பாடுவதற்குத் திருமங்கை மன்னன் ஏற்பாடு செய் தார். தொண்டரடிப் பொடியாழ்வாரும் திருமங்கையாழ்வா ரோடு சம காலத்தவரெனக் ''குரு பரம்பரை'', ''திவ்ய சூரி சரிதம்'' முதலியன கூறுகின்றன. இப் பெரியார் அரங்க நகரில் வாழ்ந்து பெருமாளுக்கு நந்தவன கைங்கர்யம் செய்து வந்தார்.

" தொடை ஒத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி என்னும்
அரியனை, அளியன் என்றருளி உன் அடியார்க்கு
ஆட்படுத்தாய்..........................."

என்று இவர் அரங்கநாதனை நோக்கி விண்ணப்பித்துக் கொண்டார். அரங்கநாதனுக்குகந்த துளசி மாலைகளையுடைய கூடையும் தோளுமாய்த் தோன்றுவதே தமக்குச் சிறந்த சிறப்பு என்றும், பாகவத கைங்கர்யம் என்ற சிறப்பான பேறு தமக்கு அளிக்க வேண்டுமென்றும் இவர் கூறுகிறார். அரங்கனுக்குப் பூமாலையோடு, பாமாலையும் இவர் சமர்ப்பித்தார். அஞ்ஞான நித்திரையிலிருந்து இவரை விழிக்கச்செய்த பக்தியனுபவங்களைத் திருமாலையில் காணலாம். யோக நித்திரையிலிருந்து இறைவனை விழித்துக்கொள்ளும்படி இவர் பாடிய பக்திப் பாடல்களைத் திருப்பள்ளி யெழுச்சியில் காணலாம். திருமாலையில் ஆழ்வாரைப் பெருமாள் துயில் உணர்த்தினர் என்றும், திருப்பள்ளியெழுச்சியில் இவர் திருமாலைத் துயிலுணர்த்தினரென்றும் வைணவர் கூறுவர்.

திருப்பாணாழ்வாரும் ஏனைய ஆழ்வார் காலத்தவராக திவ்ய சூரி சரிதம் கூறுகிறது. அடியார்கள் குலம் பாராது வழிபட வேண்டுமென்று பிராம்மணர்களுக்கு பகவான் உபதேசம் செய்தருளினர். உபதேச மாத்ரமேயாப் போகாமே, கோயிலிலே வந்து லோக சாரங்கமா முனிகள் தலையிலே திருப்பாணாழ் வாரை வைத்து, இவ் வர்த்தத்தை வ்யாபரிப்பித்துத் தொழிற்படுத்திக் காட்டினுன் அரங்க நாதன் என்று வியாக்கியானங்கள் கூறுவது வைணவ சமயத்தின் பரந்த நோக்கைக் காட்டும்.

" இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாகில்......
நின்னெடுமொக்க வழிபடவருளினுய் போலும் "

என்று தொண்டரடிப்பொடியார் பாடுதல் முனி வாகனராய்ச் சென்று அணியரங்கனை அனுபவித்த இப்பாண் பெருமாள் போன்ற மெய்யடியாரைத் திரு உளத்துக்கொண்டு போலும் என்று கருதலாம்.

மதுரமா வண்டுபாட மாமயிலாடும் திருவரங்கன் ஆர் மார்பு அவரை யாட்கொண்டது ; செய்யவாய் அவர் சிந்தையைக் கவர்ந்தது ; நீலமேனி அவர் நெஞ்சை நிறைகொண்டது ; பெரிய கண்கள் அவரைப் பேதைமை செய்தன. தம் உள்ளத்தைக் களவாடிய அக் கள்ளன் உருவத்தைக் கோயிலில் கண்டதும், ''என் அரங்கனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா வே'' என்று சத்தியஞ் செய்கிறார்.

'' சுழி பொறித்த நீர்ப் பொன்னித்
தென்னரங்கன் தன்னை
வழி பறித்தவாளன்..........''

என்று திருமங்கை மன்னன், திருமணக் கோலத்தோடு வந்த ஸ்ரீரங்கநாதனை வழிப்பறி செய்ததாக திவ்ய சூரி சரிதம் கூறும். மேலும் ஸ்ரீரங்கத்தில் மதில் கட்டுவதற்காகப் பல விதத்தில் பொருளீட்டினாரென்றும் கூறப்படுகிறது. அலை நீருலகுக்கு அருளே புரிந்த காரார் புயற்கை கலிகன்றியாகிய ஆழ்வார் அவ்வாறு செய்ததாகக் கூறுவதற்கு நூல்களில் எதுவும் ஆதாரம் இல்லை. பொன்னால் மதில் கட்ட வேண்டுமென்ற எண்ணம்,

''ஆய பொன் மதிள் சூழ்ந்து
அழகார் தென்னரங்கமே''

என்ற வாக்காகப் பிரதிபலிக்கிறது.

ஸ்ரீரங்கத்தை நேரில் கண்டு பாடினார் திருமங்கை மன்னன். குலசேகரரோ ஸ்ரீரங்கத்தை நினைத்து நினைத்து மனக் கண்ணால் கண்டு பாடினார். மேதா விலாசத்தாலும், பாவனா சக்தியின் விரிவாலும் இவர் பாடலை ஒரு கடலுக்கு ஒப்பிடலாம். இது பற்றியே ராமானுஜரும், ''தென்னரங்கம் பாட வல்ல சீர்ப் பெருமான் எங்கள் குலசேகரன்'' என்று கூறினார் போலும். ஸ்ரீரங்கத்தைத் தரிசிக்க வேண்டும் என்று பேரவாக் கொண்டு, ''என்று கொலோ, கண் குளிரக் காணும் நாளே'' என்று இவர் பாடுவதிலிருந்து இவருக்கு அவ்வாறு சென்று சேவிக்க இருந்த தடை யென்ன என்பது விளங்கவில்லை. இவ் வாழ்வார் காலத்தில் பரம பாக

வதரான தொண்டர் பெருங்குழாம் அணியரங்கன் திருமுற்றத்தை அலங்கரித்தனர் என்றும், அக்குழுவினர் வைணவ தர்மங்களை நாடெங்கும் பரப்பி வந்தனர் என்றும் ஆழ்வார் பாசுரத்தால் அறியக் கிடக்கின்றது.

"ஆடிப் பாடி அரங்கவோ வென்
றழைக்கும் தொண்டரடிப்பொடி
ஆட நாம் பெறில் கங்கை நீர் குடைந்
தாடும் வேட்கை யென்னுவதே"

என்ற அடிகளில் தொண்டரடிப்பொடியாழ்வாரைத் திருவுள்ளத்துக் கொண்டே இத் தொடரை உபயோகித்தனர் எனலாம். அக் குழாத்துள் தாமும் கூடி ஆடிப் பாடி அகங்களித்துக் கலந்துகொள்ள வேண்டு மென்ற அவா இவருக்கிருந்தது என மேலே கூறும் பாடல் தெளிவிக்கும்.

பெரியாழ்வார், ஆண்டாள் திருமணத்தைக் குறித்து ஆலோசிக்கத் தம் திருமகளாருடன் ஆழ்வார் திருநகர்க்குச் சென்று ஸ்ரீ சடகோபருடன் கலந்தன ரென்றும், அப்போது அங்கே குலசேகரரும், தொண்டரடிப்பொடியாரும் இன்னும் சில பெரியார்களும் இருந்தனர் என்றும் திவ்ய சூரி சரிதம் கூறுகிறது. திருமங்கை மன்னன் தம் குலத் தொழிலில் முனைந்து நின்ற காலம் இதுவே என்று அவ் வாசிரியர் தொடர்ந்து கூறுவர்.

"மானிட வாக்கென்று பேச்சுப் படில் வாழ கில்லேன்" என்ற வைராக்யத்தோடு வாழ்ந்த ஆண்டாள் அரங்கனுடைய அழகை, "என்னரங்கத்தின்னமுதர், குழலழகர், வாயழகர், கண்ணழகர், கொப்பூழில் எழுகமலப் பூவழகர்" என்று போற்றுகிறாள். அரங்கனையே மணக்க விரும்பி, பெரியாழ்வாரோடு ஸ்ரீரங்கம் சென்று அங்கே அழகிய மணவாளனால் அங்கீகரிக்கப்பட்டு அவனுள் ஐக்கியமாகிவிட்டாள் ஆண்டாள்.

"பக்தர்களும் பகைவர்களும்
பழமொழிவாய் முனிவர்களும் பரந்த நாடு
சித்தர்களும் தொழுதிறைஞ்சத்
திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கமே"

என்று வட நாடும் தென் நாடும் தொழ, திசை விளக்காய் நின்ற திருவரங்கப்பதியிலே இல்லறத்திலுள்ள பக்தர்களும் திரிதண்ட சன்னியாசிகளும், வேதம் உணர்ந்த முனீச்வரர்களும் கூடியிருந்து சமய உண்மைகளை நாடெங்கும் பரப்பினுர்கள் என்கிருர் பெரியாழ்வார்.

'' வான் திகழும் சோலை, மதிள் அரங்கர் வண்புகழ் மேல்
ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும்—ஈன்ற
முதல் தாய் சடகோபன்...........''

என்ற திருவாய் மொழி ஆயிரமுமே அரங்கநாதர்மீது பாடப்பட்டது என்கிருர் பட்டர். ஸ்ரீமத் நாதமுனிகள் ஸ்ரீகோசங்களைத் தேடிச் சென்று அவற்றில் நம்மாழ்வார் பாசுரங்களை முறை வகுத்து ஸ்ரீரங்கத்தில் மார்கழி மாதத்தில் பாடும்படி ஏற்பாடு செய்தார். நாதமுனிகள் பேரனுன ஆளவந்தார் உலகப் பிரவர்த்தராய் வாழ்ந்து வந்தார். அவரைச் சமயப் பணிக்குத் திருப்ப மணக்கால் நம்பி அவரிடம் சென்ருர். அவருடைய பாட்டனுருடைய புதையலை அவரிடம் ஒப்புவிக்கத் தாம் அங்கு வந்ததாகக் கூறினுர். பின்பு அவரை அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் சென்ருர். புதையல் இரண்டாற்றின் நடுவில் ஏழு சுற்றுக் கோட்டைக்குள் இருப்பதாகவும், அதை ஒரு பாம்பு காத்து வருவதாகவும் கூறினுர். ஒரு பச்சிலையைக் கிள்ளிப் போட்டால் அதைப் பெறலாம் எனக் கூறினுர். ஸ்ரீரங்கத்தை அடைந்த பிறகு ஆளவந்தாருக்கு உண்மை விளங்கி ஞானக் கண் திறந்து அன்று முதல் போக வாழ்க்கையைத் துறந்தாராம். ராமாநுஜர் ஸ்ரீரங்கத்தில் வழிபாட்டிற்குரிய சீர்திருத்தங்களை நல்ல முறையில் ஆற்றினுர் என்று 'கோயிலொழுகு' கூறுகிறது. பிற்காலத்தில் மணவாள மாமுனிகள்,

" தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்ருேம்
திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்ருேம்''

என்று ஸ்ரீரங்கத்தில் அமர்ந்து தேன் கலையாகிய தமிழ்ப் பிரபந்தங்களைக் கொண்டே தமிழர்களை உய்விக்க முயன்ருர்.

கி. பி. 1327இல் மாலிக்காபுர் தலைமையில் முஸ்லிம்

படைகள் ஸ்ரீரங்கத்தை முற்றுகையிட்டுப் பல கொடுமைகள் செய்ததாகக் 'கோயிலொழுகு' கூறுகிறது. பிறகு 1371இல் தான் விஜயநகர அரசர்களால் முஸ்லிம் படைகள் ஸ்ரீரங்கத்தை விட்டு அப்புறப்படுத்தப்பட்டனர்.

'' மாட மாளிகை சூழ் திரு வீதியும்
மன்னு சேர் திரு விக்ரமன் வீதியும்
ஆடல் மாறன் அகளங்கன் வீதியும்
ஆலி நாடனமர்ந் துறை வீதியும்
கூடல் வாழ் குலசேகரன் வீதியும்
குல விராச மகேந்திரன் வீதியும்
தேடரிய தர்ம வர்மாவின் வீதியும்
தென்னரங்கர் திருவாவரணமே.''

இந்த ஏழு பிராகாரங்கள், ஆலயம், ஊர் ஆகியவற்றைத் தன்னுள் அடக்கி முக்கால் சதுர மைல் விஸ்தீரணம் கொண்டதாயுள்ளது ஸ்ரீரங்கம். பதினைந்து பெரிய கோபுரங்கள் ஆலயத்தை அலங்கரிக்கின்றன. இந்தியாவிலேயே மிகப் பெரிய ஆலயம் இதுதான். கோயில் மதிட் சுவர்களில், சோழ, பாண்டிய, ஹொய்சள, விஜயநகர அரசர்கள் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. ஆலயம் வடக்குத் தெற்காக அமைந்திருப்பது இங்கே ஒரு புதுமை. கோயிலுக்குச் செல்பவர்கள் அச்சுதராயனால் கட்டப்பட்ட மொட்டைக் கோபுரவாயில் வழியாகத்தான் செல்ல வேண்டும். 130 அடி நீளம், 120 அடி அகலம், 43 அடி உயரம் கொண்டது இவ்வாயில். ஏழாவது மதில் சுவற்றின் நீளம் 3072 அடி; அகலம் 2521 அடி ஆகும்.

நான்காவது பிராகாரத்தில் ஆயிரக்கால் மண்டபம் இருக்கிறது. இதன் நடுவே அமைந்த திருமாமணி மண்டபத்தில் பெருமாள் ஏகாதசி யன்று எழுந்தருள்வார். நாதமுனிகள் வகுத்தபடி பெருமாளுக்கு முன் திருவாய்மொழி அத்யையனம் நடைபெறும். அரையர்கள் பண்ணோடு ஆழ்வார்கள் அருளிய செயல்களை அபிநயித்துக் காட்டுவர். ஆயிரக்கால் மண்டபத்திற்கு எதிரே யுள்ள சேஷகிரி ராவ் மண்டபத்தில் உள்ள தூண்களில் குதிரை வீரர் சிற்பங்கள் உள்ளன. இவை

மிகுந்த அழகு வாய்ந்தவை. விஜயநகர அரசர் காலத்தவை என்பர்.

மூன்ருவது மதிலுக்குக் கார்த்திகைக் கோபுரவாசல் வழியே செல்ல வேண்டும். இங்கே கருட மண்டபத்தில் பிரம்மாண்டமான கருடன் சிலே காணப்படும். பிராகாரத்தின் தெற்கிலும் வடக்கிலும் முறையே சூரிய, சந்திர புஷ்கரணிகள் உள்ளன. சந்திர புஷ்கரணி அர்த்த சந்திர வடிவாயுள்ளது. இங்கே தல விருக்ஷமாகிய புன்னைமரம் உள்ளது.

இரண்டாவது பிராகாரத்திற்குள் மேற்கே குலசேகரப் பெருமாள் மண்டபம் இருக்கிறது. தூண்கள் வரிசையாய் அமைந்துள்ள இம்மண்டபத்தைச் சேனை வென்ருன் மண்டபம் என்பர். த்வஜ ஸ்தம்பத்திற்குக் கிழக்கே மாற வர்ம சுந்தர பாண்டியனது துலாபார மண்டபம் இருக்கிறது. பெருமாளுக்குக் கார்த்திகை மாதத்தில் இங்கே டோலோத்ஸவம் நடைபெறும்.

நாழிக் கேட்டான் வாசல் வழியாக உட்பிராகாரத்திற்குச் செல்லவேண்டும். மூல ஸ்தானத்தைச் சுற்றித் தூண்கள் நிறைந்த கூடம் செல்கிறது. மூல ஸ்தானத்துக்குள் திரு வெண்ணுளி மண்டபம் வட்ட வடிவமாய்ச் சைத்யகூட வடிவில் அமைந்துள்ளது. மேலே ரங்க விமானம் பொன்ஞல் வேயப்பட்டுப் பிரணவ வடிவில் அமைந்திருக்கிறது. அதன் நான்கு கோபுரங்கள் நான்கு வேதங்கள். ரங்கசாயி அவற்றின் பொருளை உபதேசித்தவண்ண மிருக்கிருர்.

"நீல் மேகம், நெடும் பொற் குன்றத்துப்
பால் விரிந்து அகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர் கைதொழு தேத்த
விரித்திரைக் காவிரி வியன் பெருந்துருத்தித்
திரு அமர் மார்பன் கிடந்த வண்ணமும்"

என்று அந்தத் திருக்கோலத்தை இளங்கோவடிகள் அழகு பெறப் பாடுகிருர். பொன் மலைமீது, நீல நிற மேகம் படிந்து கிடக்கும் காட்சி நம் அகக் கண் முன்ஞல் தோன்றுகிறது.

மூல விக்கிரகத்தின் பாதத்தருகில் ஒரு வெண்கல விக்ரகம் இருக்கிறது. மொகலாயப் படையெடுப்பின்போது ரங்கநாதருடைய விக்ரகம் டெல்லிக்கு எடுத்துச் செல்லப் பட்டது என்றும் அது திரும்பி வரும்வரை ஸ்ரீரங்க மாளிகை யார் என்ற அந்த விக்ரகத்திற்குப் பூசை நடந்து வந்ததாகக் கூறப்படுகிறது.

ஐந்தாவது பிராகாரத்தில் உள்ள தாயார் சந்நிதி பெரிய ஆலயத்தில் உள்ள தனி சந்நிதி இங்கே இரண்டு மூல விக்ரகத் தாயார்கள் உள்ளன. தயாருக்குப் படி தாண்டாப் பத்தினி என்று பெயர். இந்தச் சந்நிதியை விட்டுத் தாயார் வெளியே வருவதில்லை. பரமபத வாயிலுக்குப் பெருமாள் எழுந்தருளும்போது, மூன்று வாயில்கள் கூடுமிடத்திலிருந்து தாயார் தரிசனம் கண்டருளுவார். தாயாருடைய ஐந்து விரல்கள் பதிந்த இடத்தில் ஐந்து குழிகள் ஐதிக்யமாக விளங்குகிறது. துலுக்க நாச்சியார் சந்நிதி ஒன்று பெரிய ஆலயத்துள் இருக்கிறது. இந்த அம்மை டெல்லி பாதுஷா வின் மகளென்றும், அரங்கநாதனுல் அபிமானிக்கப்பட்டு அவரது மனைவியாக அங்கீகரிக்கப்பட்டாள் என்றும் கூறுவர். பெரிய பெருமாளுடைய ஆபரணங்கள் மிக விலை உயர்ந் தவை. சொக்கநாத நாயக்கருடைய முத்தங்கி ஏகாதசி தொடங்கி நான்கு நாட்களுக்குப் பெருமாளுக்கு அணிவிக்கப் படும். இதன் மதிப்பு பத்து லக்ஷம் ரூபாய். ராணி மங்கம் மாள் அளித்த ரத்தின அங்கி சுமார் பத்து லக்ஷம் ரூபாய் பெறும்.

'' அறிவிலா மனிச ரெல்லாம் அரங்கமென் றழைப்பாராகில்
பொறியில் வாழ் நகர மெல்லாம் புல்லெழுந் தொழியு
[மன்றே.''

---

# திருவேங்கடம்

ஆழ்வார்களில் தொண்டரடிப்பொடி நீங்கலாகப் பதின்மர் பாடிய பெருமான் திருவேங்கடத் தெம்பெருமானே யாவார். இம்மலைமீது திருவேங்கடத்தெம்பெருமான் சரித்திரக் காலத்துக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பே கோயில் கொண்டருளியுள்ளார் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. பாரத நாட்டில் சமய பேதமின்றி அனைவரும் வணங்கும் கடவுளாகவே எம்பெருமான் காட்சியளிக்கிறார்.

''தாழ் சடையும் நீள் முடியும் ஒன் மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து.''

ஹரிஹர ரூபத்தால் காட்டியருளிய சீலம் திருவேங்கடமுடையான் பக்கலில் பொலிகின்றது என்று அனுசந்தித்து பேயாழ்வார் இப்பாடலை அருளிச் செய்தார். ஏனெனின், எம்பெருமான் அவதாரங்களில் சங்கர நாராயணாவதாரமு மொன்று.

தொல்காப்பியப் பாயிர ஆசிரியர் பனம்பாரனார்,

''வட வேங்கடம் தென் குமரி ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து.''

என்று வேங்கடத்தைத் தமிழகத்தின் வடவெல்லையாகக் கூறிப் போந்தார். ''வடவேங்கடம்'' என்ற தொடர்க்குப் பொருள் கூறப் புகுந்த உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், நிலங் கடந்த நெடுமுடியண்ணலை நோக்கி உலகம் தவஞ்செய்து வீடு பெற்ற மலையாதலானும், எல்லாரானும் அறியப் படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக் கூறினர் என்பர்.

''பனிபடு சோலை வேங்கடத்தும்பர்
மொழி பெயர்த்தே எத்தர்'' (அகம் 211)

என்ற மாமூலனார் பாடல், வேங்கடத்தின் வடவெல்லை தொடங்கித் தமிழ் மொழி மாறித் தெலுங்கு மொழி வழங்கிற்று என்று கூறுகிறது.

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ் வரம்பறுத்தத் தண்புனனாடு"

என்று சிலப்பதிகாரம் வேங்கடத்தைத் திரிவிக்கிரமன் குன்றமென்றும், தமிழ் நாட்டெல்லை யென்றும் கூறுகிறது. திருவேங்கடமுடையானை "நெடியோன்" என்ற திருநாமத்தால் இளங்கோவடிகள் கூறியதுபோல் குலசேகரரும் அப்பெருமானை, "நெடியோனே! வேங்கடவா!" என்று விளிக்கிறார்.

"குன்றம் ஏந்தி குளிர் மழை காத்தவன்
அன்று ஞால மளந்த பிரான்பரன்" என்றும்,

"தாள் பரப்பி மண் தாவிய ஈசன்" என்றும்,

உலகளந்த சரித்திரத்தால், திருவேங்கட முடையானைப் பெரியார் புகழ்ந்தது பற்றித் திருவாய்மொழியீட்டில் பூர்வாசாரியர்கள் பின்வருமாறு எழுதினர்.

திருவேங்கடமுடையானை யன்றோ கவி பாடிற்றென்னில்,

"கொண்டாய் குறளாய் நிலமீறடியாலே,
விண் தோய சிகரத் திருவேங்கடமேய அண்டா"
(பெ. திருமொழி) என்றும்,

"மண்ணளந்த இணைத் தாமரைகள்" என்றும்,
உலகமளந்த பொன்னடியே அடைந்து உய்ந்து"

என்றும், ஆழ்வார்கள் அருளிச் செய்யா நிற்பார்கள். எல்லாரையும் திருவடிக்கீழ் இட்டுக் கொள்ளுகைக்காக நிற்கிற நிலையாலும், வரையாதே கானமும் வானரமுமான இவற்றுக்கு முகங் கொடுத்துக்கொண்டு நிற்கிறபடியாலும் திருவேங்கடமுடையான் ஸ்ரீ வாமனனாகச் சொல்லக் கடவதிறே என்பது.

திருவேங்கட மலைமேல் திருமாலின் நின்ற திருக்கோலத்தைப் பற்றி இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் 'காடு காண் காதையில்' உருக்கமாக அழகு பெறப் பாடியுள்ளார் :

"வீங்கு நீரருவி வேங்கடமென்னும்
ஓங்குயர் மலையத்துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இட நிலைத் தானத்து
மின்னுக் கொடி யுடுத்து விளங்கு விற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும், பால் வெண் சங்கமும்
தகை பெறு தாமரைக் கையினேந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பு வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கணெடியோன் நின்ற வண்ணமும்"

*கொடி வழித் தீர்த்த முதலிய மிக்க அருவி நீரையுடைய வேங்கடமென்று பெயர் கூறப்படும் மலையினுச்சி மீதே ஞாயிறும் திங்களும் இரு மருங்கும் ஓங்கி விளங்கிய இடைப் பட்ட விடத்தே நல்ல நீல நிறத்தையுடைய மேகம் தன் மின்னுகிய புதுப் புடைவையை யுடுத்துத் தன் வில்லாகிய பணியைப் பூண்டு நின்றாற்போலப் பகையை வருத்தும் ஆழியையும் கங்கையையும் அழகிய தாமரைக் கையகத்தே வலனுமிடனுமேந்தி அழகு கிளரு மாரத்தைத் திருமார்பிற் பூண்டு பொற் பாவாடையை யுடுத்து வெளிப்பட்ட சிவந்த திருக்கண் மலரை யுடைய நெடியோன் நின்ற வண்ணத்தை ஆழ்வார்கள் பாடி யருளிய தோரணையில் பக்தியுள்ளத் தோடும் கவிதையுள்ளத்தோடும் பாடி யருளினார் இளங்கோவடிகள்.*

"விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவராதலோ அரிது"

என்று அகநானூற்றுப் பாட்டொன்று வேங்கடம் தன்பால் நிகழும் விழாக்களின் சிறப்பால் செல்வச் சிறப்பு வாய்ந்த நகரமாக விளங்குகிறது என்கிறது.

"ஓண விழவி லொலி யதிர—பேணி
வருவேங்கடவா" (நான்முகன் 40)

என்று, திருவோணத் திருநாளில் திருப்பல்லாண்டு பாடுகை,

வேத பாராயணம் செய்கை, ஆடுகை, பாடுகை முதலான வற்றாலுண்டான தொனி அதிரப் பெற்றதாய்ப் பக்தர்கள் விரும்பி வந்து சேரப்பெற்றதான திருவேங்கட மலையை இருப்பிடமாக உடையவனே என்ற திருமழிசை யாழ்வார் வாக்கும் அகநானூற்றுப் பாடலை ஆதரித்துப் பேசும். எனவே திருவேங்கடமுடையான் விஷயமாகத் திருவிழாக்கள் ஆதிகாலம்தொட்டே நடந்து வந்தன என்பதற்குச் சங்கப் பாடல் ஆதாரமுமுளது.

கி. பி. எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் ஐயனரிதனர் வேங்கடத்தில் ஆழி யான் கோயில் கொண்டுள்ளதையும் வையத்திட ரெல்லாம் நீங்க அருளும் அவன் திறத்தையும் ஆற்றுப்படுத்திக் கூறுதல் காண்கிறோம்.

''வெறி கொளறை யருவி வேங்கடத்துச் செல்லின்
நெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்
கிருளீயும் ஞாலத்திடரெல்லாம் நீங்க
அருளீயு மாழியவன்'' (பாடாண் படலம் 42)

நறுநாற்றத்தினையுடைத்தாய் ஒலிக்கும் அருவியாற் பொலிந்த திருவேங்கடத்திடத்துப் போவையாயின், முறைமை கொண்ட வேடத்தை யுடையோய், நீயும் இந் திரியங்கட்கு மயக்கத்தைக் கொடுக்கும் காசினியில் துய ரெல்லா மொழிய அருளை வழங்கும் சக்கராயுதத்தை யுடையவன் எனல் காண்க.

''கையது வேல் நேமி''

என்று பொய்கையாரும்,

''மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன்''

என்று குலசேகரரும்,

''சுடராழி வலனுயர்த்த மல்லார்தோள்
வடவேங்கடவாணன்''

என்று திருமங்கை மன்னனும்,

''சீறு வெறியும் திருநேமிவலவா''

என்று நம்மாழ்வாரும்,

"வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கடவற்"

என்று ஸ்ரீ ஆண்டாளும், திருவேங்கடமுடையானது சக்கராயுதத்தை மங்களா சாஸனம் செய்துள்ளதை ஈண்டுக் காண்க.

திருப்பதி வடமொழி தென்மொழி நிலங்களுக்கு வரம்பாய், இரண்டுக்கும் மத்தியாய் உள்ளது, வேதம் முதலான நூல்களில் கூறியுள்ள பொருள்களுக் கெல்லாம் முடிவான பொருளாகிய பரம்பொருளை வேங்கடாசலபதி வடிவில் காட்டுகிறது என்று ஒன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த கம்ப நாடர் திருப்பதி மலையின் பெருமையைப்பற்றிப் பேசுகிறுர்.

"வலங்கொள் நேமி மழை நிற வானவன்
அலங்கு தாளிணை தாங்கிய அம்மலை
விலங்கும் வீடுறுகின்றன மெய்ந் நெறிப்
புலங் கொள்வார்கட் கனையது பொய்க்குமோ"

என்கிறுர். இளங்கோவடிகளைப் போலவே கம்ப நாடர் நேமியை யுடைய மழை நிற வண்ணனை அகக்கண்ணுல் காண்கிறுர். வாழ்விலங்கும் வீடுபெறும் அம் மலையில் ஞானியர்க்குக் கதி கிடைக்காது போகுமா? அந்த மலையில் அருவினையின் பெரும் பகைவரான ஞானிகள் இருக்கிறுர்கள். அவர்கள் பிறவிக்குப் பகைவர்கள். அப் பெரியாரை அங்கேதான் சென்று தரிசிக்க வேண்டுமென்பதில்லை. இருந்த இடத்தில் இங்கிருந்தே திக்கு நோக்கி வணங்குவதற்குரியவர்கள் என்று சுக்கிரீவன் வாயிலாகக் கம்பன் கூறுகிறுன். "கோடுறு மால் வரை அதனைக் குறுகுதிரேல், உம் நெடிய கொடுமை நீங்கி வீடுறுதிர்" என்கிறுன் சுக்கிரீவன். மேலும், திருவேங்கட மலையை நெருங்கிய அளவிலேயே பாவம் நீங்கி மோட்சம் அடைவீர்கள் என்று கம்பர் கூறுகிறுர். "திருவேங்கடம் நங்கட்குச் சமன் கொள் வீடு தரும் தடங்குன்றமே" என்று நம்மாழ்வாரும் பணித்தருளினுரன்றே?

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் சீகாளத்திப் புராணத்தில்,

"அரவணைச் செல்வன் வாழும்
அந்தமிழ் நிலத்தினெல்லை
திருமலை கண்டுணர்ந்தோர்
செறிவினை தொடரறுக்கும்
பெருமலை கண்டிறைஞ்சி"

என்று வேங்கடமலையின் புகழைப் பாடுகிறார். திருமால் வாழும் தமிழ் நாட்டு எல்லை நிலமாகிய திருமலையைக் கண்டுணர்ந்தோரது பாவ வினைகள் தீரும் என்று அன்னார் கூறுவது அறியத்தக்கது.

தாரகாசுரனைக் கொன்ற தோஷம் தீர முருகக் கடவுள் திருவேங்கடமலையில் திருமாலைக் குறித்துத் தவஞ் செய்தார் என்று திருவேங்கட புராணம் கூறுகிறது.

"கந்தன் வேங்கடக் காவலியற்றிடற்
கெந்த நோன்பியற்றிப் பெற்றனன்"

என்று மேலும் அப் புராணமுடையார் முருகக் கடவுள் திருப்பதிக்கு க்ஷேத்திர பாலகராயுள்ளதைக் கூறுதல் காண்க.

"வந்திக்க வந்தனை கொள்ளென்று கந்தனு மாதவரும்
சிந்திக்க வந்தனை வேங்கடநாதா"

என்று பாடினார் பிள்ளைப்பெருமாள் ஐயங்காரும். முருக பக்தராகிய அருணகிரிநாதர் திருவேங்கடத்தைத் திருமாலின் உறைவிடமாக அறுதியிட்டுரைக்கின்றார்.

"உலகீன்ற பச்சை யுமையணன்
வட வேங்கடத்திலுறைபவன்
உயர் சாரங்க சக்ர காதலன் மருகோனே"

என்று தமது திருப்புகழில் பாடுகிறார்.

"நீலத் திரை கட லோரத்திலே நின்று
நித்தம் தவஞ் செய் குமரி எல்லை — வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு"

என்று வட மாலவன் குன்றம் தமிழகத்து வடவெல்லையாகத் திகழ்ந்ததைச் சிறிது காலத்துக்குமுன் வாழ்ந்த பாரதியார் கூறியுள்ளார்.

இவ்வாறு தமிழ் நூல்களுள் பலபட மதிக்கப்பட்ட திருமலை தென்னிந்தியாவின் சரித்திர காலத்துக்கு முற்பட்ட கோயில்களுள் மிகப் பழைமையானது என்பது ஆராய்ச்சியாளரது முடிந்த கூற்று. வேங்கடேசப் பெருமானை அடைய ஏழு மலைகளைக் கடந்து செல்லுதல் வேண்டும். இடை வழியில் அழகிய இயற்கைக் காட்சிகள், கண்ணைக் கவரும் பசும்புற் படாம் போர்த்த குன்றுகள், பள்ளத்தாக்குகள் ஆகியவற்றைக் கடந்து செல்லுதல் வேண்டும். திருப்பதி மலைகள் ஏறக்குறைய இரண்டாயிரம் அடி உயரமும், நூறு சதுர மைல் பரப்புமுள்ளவை. ஆதிசேடனது ஏழு தலைகளே இத் திருமலை என்றும், மத்திய ஸ்தானம் அஹோபிலம் என்றும், வாலின் பாகமே ஸ்ரீசைலம் என்றும் புராணங்கள் கூறுகின்றன. ஆதிசேடனுடைய மணிமுடிபோல் விளங்குகிறது திருப்பதி மலைக்கோயில். இதைச் சேஷாசலம் என்பர். பெருமாளுக்கும் சேஷாசலபதி என்று பெயர்.

ஆதிசேஷனுக்கும் வாயு பகவானுக்கும் ஓர் யுத்தம் ஏற்பட்டது. ஆனந்த பர்வதத்தை அசைய ஒட்டாமல் காப்பாற்ற ஆதிசேஷன் தன் படம் முழுவதையும் விரித்து மூடிக் கொண்டான். அந்த மலையை வாயு பகவான் அசைக்க முயன்று தோற்றான். ஆதிசேஷனுக்குக் கர்வம் ஏற்பட்டது. தான் இல்லாவிட்டால் பகவானுக்குக் கூட வசதிகள் இருக்காது என்று எண்ணினான். பகவானுக்குச் சேஷன் கர்வத்தை அடக்க வேண்டுமென்று எண்ணம். ஆதிசேஷனை ஒரு கேள்வி கேட்டார். மிகச் செருக்கோடு தலையைத் தூக்கி ஆதிசேஷன் பதில் சொல்ல வாயு அந்த இடைவெளியில் புகுந்து அந்தப் பர்வதத்தைச் சுவர்ணமுகி நதி தீரத்தில் கொண்டுவந்து சேர்த்தது. சேஷனுக்கு வெட்கம் மேலிட்டுக் கர்வம் அடங்கித் தன் பெயரால் அம் மலை வழங்க வேண்டுமென்று வரம் கேட்டானும். பகவானும் அப்படியே வரமளித்தாராம். அன்று முதல் அம் மலைக்குச் சேஷாத்திரி என்று பெயர் உண்டாயிற்றும்.

விருஷபன் என்ற அசுரன் போர் வெறி கொண்டவன். அவன் பகைவரின் முதுகையே கண்டவன். ஏழுமலையானையே ஒரு வரம் கேட்டானும். அவரோடு போர்புரிய வேண்டும்

என்றும். சுவாமியும் வரம் கொடுத்தாராம். போர் பயங்கரமாக மூண்டது. அசுரன் நினைத்ததுபோல் வெற்றி அவன் பக்கம் இல்லை. ஏழுமலையான் பட்டை நாமம் அவனைப் பயமுறுத்திற்று. பகவான் சக்ராயுதத்தை எடுத்ததும் அசுரன் சரணுகதி யடைந்து அவர் பக்தனுகிவிட்டான். தன் பெயரால் அந்த மலை வழங்க வேண்டுமென்று ஏழுமலையானைக் கேட்டான். கேட்ட வரம் கொடுக்கும் கீர்த்தியுள்ள ஏழுமலையான் வரமளித்தார். விருஷபாசலம் என்ற ஒரு பெயரும் மலைக்கு அன்று முதல் வழங்கலாயிற்று.

ஆஞ்சநேயரின் தாயாகிய அஞ்சனுதேவி திருமலையிலுள்ள ஆகாசகங்கை என்னும் அருவியருகில் தவங் கிடந்து ஆஞ்சநேயரைப் பெற்றெடுத்தாளாம். அன்று முதல் அஞ்சனுத்ரி என்று அவள் பெயரால் மலை அழைக்கப் பட்டதாம்.

கலியுகத்தில் இம் மலைக்கு வேங்கடமலை என்ற பெயர் உண்டாயிற்று என்று வராக புராணம் கூறுகிறது. ''வேம்'' என்பது அழிவின்மை. ''கடம்'' என்பது செல்வம். அழிவில்லாத அருட் செல்வத்தையும், பொருட் செல்வத்தையும் தருவதால் வேங்கடம் என்ற பெயர் பெற்றது என்பர். ''வேம்'' என்ருல் பாவம். ''கடம்'' என்ருல் எரித்தல். பாவத்தை எரித்தலால் வேங்கடம் என்ற பெயர் உண்டாயிற்றென்ருர்கள் வேருெரு சாரார்.

புரந்தரன் என்ற மகா பாவியாகிய ஒரு பிராமணனுடைய பாவத்தை எல்லாம் போக்கியதால் வேங்கடம் என்ற பெயர் உண்டாயிற்றென்று பிரம்மாண்ட புராணம் கூறுகிறது. ஆனுல் எல்லாவற்றிற்கும் மேலாக இந்த மலை திருமலை என்று அனைவராலும் அழைக்கப்படுகிறது. இறைவன் கோயில் கொண்ட திருப்பதிகள் பல. ஆனுல் திருப்பதி என்று சிறப்பாகத் திருவேங்கடத்தைத்தான் கூறுகிருர்கள். வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் ஒருங்கே உயிர் நிலையா விளங்கும் இந்த ஏழுமலையானை வடநாட்டவர்கள் பாலாஜி என்று கொஞ்சிப் பேசுகிருர்கள்.

திருப்பதியைப்பற்றி அநேக புராணங்கள் உண்டு. அவற்றில் முதன்மையானது ''வேங்கடேச மான்மியம்'' என்பது.

இது பதினைந்தாம் நூற்றாண்டு நூல். சுவேதவராகமூர்த்தி பாதலத்தினின்றும் உலகை உய்யக்கொண்டபின் திருவேங் கடமலையைத் தமக்கு உறைவிடமாகக் கொண்டார் என்று புராணம் கூறுகிறது. வராகசாமி கோயில் கோனேரிக் கரை யில் இருக்கிறது. வைணவ ஆசாரியர்கள் திருமலையை வழி பாட்டிற்குரிய சிறந்த இடமாகக் கொண்டு பலமுறை சென்று வந்துள்ளார்கள். இராமாநுஜர் திருமலையில் பல காலம் தங்கியிருந்தார். திருமலை நம்பியின் இராமாயண உபந்நியாசங்களைக் கருத்தோடு மலையில் கேட்டு மகிழ்ந்தார்.

## ஆழ்வார்களும், வேங்கடமும்

திருவரங்கம் திசை விளக்காய் நின்றது. திருமாலிருஞ் சோலை தென் திசைக்குத் திலகமாய் நின்றது. ஆனால் திரு வேங்கடமலையோ திலதம் உலகுக்காய் நின்றது. ''தென்ன னுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலையா வடிவமைந்த'' என்கிறபடியே பூமிப்பிராட்டிக்குத் திருமுலைத் தடங்களாகச் சொல்லப்பட்டுள்ளன.

## பொய்கையார்

வேங்கடம் உலகப் பிரயோஜனங்களை விரும்புபவர் களுடைய இஷ்டத்தையும், பூர்த்தி செய்யவல்லது. பகவத் பக்தர்களுடைய பிறவிப் பிணியை நீக்கி முத்தியும் தரவல் லது. தினந்தோறும் பற்பல திசைகளினின்றும் வைதீகர்கள் வந்து தூப தீபத்துடன் திருவேங்கடத்தை வணங்குவார்கள்.

திருவேங்கட மலையில் இரண்டொரு காட்சிகளை நமக்குக் காட்டுகிறார் பொய்கையார்.

பட்டிகளிலே மேய வருகின்ற யானைகள்மீது குறவர்கள் தங்களுக்குச் சாதாரணமாகக் கிடைக்கும் நவரத்தினங்களைக் கற்களுக்குப் பதிலாகக் கொண்டு எறிவார்கள். இந்தக் கற் களின் ஒளியை மின்னலென்று எண்ணி மலையிலுள்ள பாம்பு கள் புற்றில் ஓடி ஒளிந்து கொள்ளும்.

இராக்காலங்களில் யானைகள் பட்டி மேய வரும். அதனைத் துரத்துவதற்காகக் குறவர்கள் ஒரு கையில் அம்பு தொடுத்த வில்லையும் மற்றொரு கையில் தீவட்டியையும்

பிடித்துக் கொளுத்திக்கொண்டு அதட்டிச் செல்வார்கள். யானைகளோ அவற்றைக் கண்டு அஞ்சி ஓடிவிடும். ஆனால் வழியில் அகஸ்மாத்தாக விழுந்த நட்சத்திரத்தைக் கண்டு அது குறவர் எறிந்த தீவட்டி என்று அஞ்சியோடும் திருமலையே இறைவன் குன்று.

பெண்கள், பாரசி நாள் அதாவது த்வாதசி யன்று எம்பெருமானுக்கு மாலைகளோடு தூபம் சமர்ப்பிப்பார்கள். அந்தத் தூபம் ஆகாசத்தில் நடுவே தோன்றும் நட்சத்திரங்கள் மறையும்படி மாசு பண்ணும்.

## பூதத்தார்

"போதறிந்து வானரங்கள் பூஞ்சுனை புக்கு ஆங்கவர்ந்த
போதரிந்து கொண்டேத்தும்போது."

அதாவது மலையில் வாசஞ் செய்யும் குரங்குகளும் விடியற் காலையில் துயில் விட்டெழுந்து பூத்த சுனைகளில் சென்று ஸ்நானம் பண்ணி அங்குள்ள செவ்விப்பூக்களைப் பறித்துக் கொண்டு இறைவன் பாதத்தில் சமர்ப்பித்துத் தோத்திரம் செய்யும்.

பூதத்தாரின் மற்றொரு சித்திரம் நம்மைக் கவர்கிறது.

"பெருகு மத வேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருகணிள மூங்கில் வாங்கி—அருகிருந்த
தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம்."

மதம் பிடித்துத் திரிந்த களிறு (ஆண் யானை) தன் பிடியைக் (பெண் யானை) கண்டது. தன் பேடையைத் திருப்தி செய்ய வேண்டி அருகில் இருந்த மூங்கில் குருத்தைப் பிடுங்கித் தேனிலே தோய்த்து அப் பேடையின் வாயிலே பிழிந்தது. இச் சித்திரம் அகநானூற்றுக் காட்சி போல் அமைந்துள்ளது. பெருந் தமிழராகிய ஆழ்வார் தமிழ்த் துறையில் கவிகள் அருளிச் செய்தல் இயல்புதானே.

## பேயாழ்வார்

ஒரு மத யானை தன் பிடியோடு கூடி பிறகு ஊடி அதனால் ஏற்பட்ட கலகத்தினால் அங்கும் இங்கும் திரிந்து கோபத்தோடு தன் தந்தத்தை மணிப் பாறைகளிலே யிட்டுக் குத்

*தவும், அந்தத் தந்தத்தினின்றும் வெண் முத்துக்கள் உதிர்கின்ற திருமலையே ஆதிவராக மூர்த்தியின் மலை என்கிருர் பேயாழ்வார்.*

*திருமலையின் சிகரங்கள் வானளாவி சந்திர மண்டலத்தை முட்டுகின்றன. இங்கு ஆழ்வார் நமக்கு ஒரு வர்ணனை காட்டுகிருர்.*

*திருமலையின் உச்சிமுகட்டிலே ஓர் ஆண் குரங்கும் பெண் குரங்கும் உட்கார்ந்துகொண்டிருக்கின்றன. காதற் பெண் குரங்கு தன் காதலனை நோக்கி, ''வெண்மையான சந்திரனைப் பிடித்துக்கொடு'' என்கிறது. அதைக் கண்ணுடியாக முகம் பார்க்க வைத்துக்கொள்ளலாம் என்று கருத்து போலும்.*

**'' தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்தமந்தி**
**அளித்த கடுவனையே நோக்கி— விளங்கிய**
**வெண் மதியம் தா என்னும் வேங்கடம்.''**

*திருமலையிலே ஒரு சுனையோரத்திலேயுள்ள களாச் செடியில் உள்ள களாப்பழங்களைப் பறித்துக்கொண்டிருந்த பெண் குரங்கு சுனை நீரில் தன் பிரதிபிம்பத்தைக் கண்டது. வேருெரு குரங்கு களாப்பழங்களைப் பறிப்பதாக எண்ணி, ''எனக்கு களாப்பழம் தா'' என்று கை நீட்டுகிறதாம். அந்தத் திருமலையே விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு என்கிருர் ஆழ்வார்.*

*பெருமாள் சந்நிதிக்குப் போவோர் வாய் கொப்புளித்துக் கை கால் சுத்தம் செய்துகொண்டு புஷ்பங்களைப் பூஜைக்கு எடுத்துப்போவது வழக்கம். அதைப்போலவே யானைகளும் தங்கள் மத்தகம், காது முதலியவற்றிலிருந்து வடிகிற மத நீரிஞல் வாய் கொப்புளித்து, அருவிபோலக் காலளவும் பெருகுகின்ற மத ஜலத்திஞல் கால் கழுவிக்கொண்டு பொய்கையிலுள்ள தாமரைப் பூக்களைப் பறித்து அப்பன் திருவடியில் சமர்ப்பித்து வணங்குகின்றன என்கிருர் ஆழ்வார்.*

*திருமலையிலுள்ள ஒரு யானை மலைமுகட்டில் படிந்திருந்த மேகத்தை எதிரியானதொரு யானை யென்று எண்ணி வேக*

மாகச் சென்று துதிக்கையினால் குத்திற்று. இதைப் பார்த்த யாளி யொன்று யானையின் மதத்தை அடக்க எண்ணி அதன் மீது பாய்ந்து அதன் கொம்பை முறித்தெறிந்து வாய் விட்டு அலறி விழும்படி அதைக் கொன்று கர்ஜிக்கின்றதாம்.

'' களிறு முகில் குத்த கையெடுத்தோடி
ஒளிறு மருப்பொசி கையாளி—பிளிறி
விழ கொன்று நின்ற திருவேங்கடமே ''

இறைவன் குன்று என்கிறார் ஆழ்வார்.

வானத்திலே சஞ்சரிக்கின்ற சந்திரன் தனது அடி வயிறு திருமலைச் சிகரத்தின் நுனியில் தேயும்படி செல்கிறான். அத் திங்களின் மடியில் இருக்கின்ற அழகிய முயலை மலையிலுள்ள ஒரு வேங்கைப் புலி பார்த்து அதனை உணவாகக் கொள்ளக் கருதி பார்க்கிறது. இத்தகைய வானளாவிய சிகரங்களுடைய திருமலையே கண்ணபிரானுடைய இருப்பிடமான மலை என்கிறார் ஆழ்வார்.

திருமழிசையாழ்வார் ஓர் அற்புதக் காட்சியைக் காண்கிறார். ஆகாயத்திலே பிரகாசிக்கிற சந்திரனைத் துதிக்கையினால் பிடித்தெடுத்து ஸ்ரீநிவாசன் சந்நிதியில் நந்தா விளக்காக வைக்கவேண்டுமென்று துதிக்கையை நீட்டியபடியே ஒரு யானை இருந்தது. அக் காரியத்திலேயே யானை ஊன்றி இருந்ததினால் தன்னை வில்லோடு வேடுவர் வளைத்துக் கொண்டதை அந்த யானை கவனிக்கவில்லை. இத்தகைய மலையிலுள்ள இறைவனை நம்மை வணங்கவேண்டுகிறார் திருமழிசைபிரான்.

'' வைப்பன் மணி விளக்கா மாமதியை மாலுக்கென்
றெப்பொழுதும் கை நீட்டும் யானையை—எப்பாடும்
வேடு வளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடம் ''

என்பது ஆழ்வார் பாடல்.

யாளிகள், சிங்கங்கள், நவரத்தினங்கள், புஷ்ப விருக்ஷங்கள், நவமணியைக் கொழித்துக்கொண்டு வந்து வீழ்கின்ற அருவிகள், பாயப் பெற்ற காடுகள், குரங்குகள், வேடர்கள் ஆகிய இவை யெல்லா முடைத்தான திருமலை வேங்கடம் என்கிறார்.

"வேங்கடமே விண்ணோர் தொழுவதும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய் வினை நோய் தீர்ப்பதுவும்"

என்று வேங்கட மலையின் புகழைப் பாடுகிறார் ஆழ்வார்.

பாண்பெருமான் "விரையார் பொழில் வேங்கடவன்" என்றும், "மந்தி பாய் வடவேங்கட மாமலைக் கிறைவன்" என்றும் மங்களா சாஸனம் செய்கிறார். வானவரையும், மண்ணவரையும் வாழ்விக்கவே மேட்டு மலையில் எம்பெருமான் கோயில் கொண்டிருக்கிறார் என்பது அவர் கருத்து.

கண்ணபிரானது பால சேஷ்டிதங்களைப் பாடும் பெரியாழ்வார்

"மின்னலங் காரற் கோர் கோல் கொண்டு வா
வேங்கட வாணற் கோர் கோல் கொண்டுவா" என்றும்,
"......................நீள் திருவேங்கடத் தெந்தாய்
பச்சைதமனகத்தோடு பாதிரிப்பூச் சூட்டவாராய்"

என்றும், வேங்கடத்தெம்பெருமானைப் பாடுகிறார்.

திருவேங்கடத்தான்மீது மையல் கொண்ட ஆண்டாள் மேகத்தை நோக்கி,

"சலங் கொண்டு கிளர்ந் தெழுந்த தண் முகில்காள்! மா வலியை
நிலங் கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்காள்"

என்று விளித்துத் தன் நடலை நோயை அவன்பால் கூறும்படி மேகத்தைத் தூது விடுகிறாள்.

குலசேகராழ்வார் "ஊனேறு செல்வத்து உடற் பிறவி" வேண்டேனென்கிறார். "கோனேரி வாழும் குருகாய்" பிறக்க அவாவுகிறார். அப்படி யிருந்தால் அடியாரின் பாத விசேடம் பெற்ற நீரைப் பானம் பண்ணலாம் என்று கருதுகிறார். குருகுக்கு இறகு உண்டு. அது வேறோரிடத்திற்குப் பறந்து சென்று விடக் கூடும். எனவே அக் கோனேரியில் நீங்காது வாழும் மீனாய்ப் பிறக்க எண்ணுகிறார். ஆனால் கைங்கர்யபரனான தான் மீனாய் நீர் நிலையைப்பற்றி உயிர் தரிக்க வேண்டி வரும் என்ற எண்ணம் அவருக்கு உண்டாகிறது. எனவே,

" மின் வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தான் உமிழும்
பொன் வட்டில் பிடித்துடனே புகப் பெறுவன் ஆவேனே "

என்று எண்ணுகிறார்.

இவ்வாறே ஒவ்வொரு பிறப்பினும் ஒவ்வொரு பிறப்பு சிறந்தது என்று செண்பகமாகவும், புதராகவும், மலைக் குவடாகவும், கானாறாகவும், நெறியாகவும், படியாகவும் மாறி மாறிப் பிறக்கும் " பிறப்புடையவன் ஆவேனே " என்கிறார். பிறவிகள் அனைத்தும் ஒரு குற்றம் பெற்றே நிற்பது. ஒரு பிறவியையும் வேண்டிக்கொள்ளத் தமக்குத் தகுதி இல்லாமையை ஆழ்வார் உணர்கிறார். எனவே,

" எம்பெருமான் பொன் மலை மேல் ஏதேனு மாவேனே "

என்று இறைவனைச் சரணாகதி அடைகிறார்.

பாரத தேசம் முழுவதும் பரபரப்பாய் பாடித் திரிந்த திருமங்கை மன்னன் " திருவேங்கடம் அடை நெஞ்சே " என்று சொல்லித் திருமலையை ஆஸ்ரயிக்குமாறு தம் திருவுள்ளத்தைத் தூண்டினார். ஆழ்வாரது பக்தி பிரவாகமாகப் பெருகி ஓடுகிறது.

" நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக் கொண்டருளே " என்றும், அன்றே வந்தடைந்தேன், அண்ணா! வந்தடைந்தேன், அப்பா! வந்தடைந்தேன், அரியே! வந்தடைந்தேன், ஆற்றேன் வந்தடைந்தேன், அற்றேன் வந்தடைந்தேன் என்றெல்லாம் கூறிச் சரண் புகுந்து தன்னை ஆட்கொள்ள வேண்டுகிறார். " வந்தாய், என் மனம் புகுந்தாய், மன்னி நின்றாய் ", இனியா னுன்னை என்றும் விடேனே என்று பெருமிதத்தோடு பாடுகிறார்.

திரு வேங்கடமலையின் இயற்கைக் காட்சிகள் அவர் மனத்தைக் கவர்கின்றன.

" குறவர் மாதர்களோடு வண்டு குறிஞ்சி மருளிசை
பாடும் வேங்கடம் "

" வண்டு வாழ் வட வேங்கடம் "

" கானவரிடு காரகில் புகையோங்கு வேங்கடம் "

"கவரிமாக்கணம் சேரும் வேங்கடம்"
"வேய்கள் நின்று வெண் முத்தமே சொரி வேங்கடம்"

என்று வேங்கடத்தின் மலை வளத்தைப் பாடுகிறார்.

"வட திருவேங்கட மேய மைந்தா!" என்று உரிமையோடு உறவு கொண்டாடுகிறார்.

நம்மாழ்வாரோ, "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய" வேண்டுமென்கிறார் திருவேங்கடத்தானுக்கு.

வானவர் வானவர்கோனோடும் நமன்றெழும் திருவேங்கடம், நமக்குச் சமங்கொள் வீடு தரும். பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயும். ஓயும் மூப்புப் பிறப்பு இறப்புப் பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்தான். ஆகையால்,

"வைத்த நாள் வரை எல்லைக் குறுகிச் சென்று
எய்த் திளைப்பதன் முன்னம் அடைமினோ
பைத்த பாம்பணையான் வேங்கடம்"

என்கிறார்.

வேங்கடத்தான், உலப்பில் கீர்த்தியம்மான், அசுரர் குலமெல்லாம் சீறா எறியும் திரு நேமி வலவன், எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுது, எந் நாளும் நின்று இமையோர்கள் இறைஞ்சி இனமினமாய் வழிபாடு செய்யப்படுபவன், கொடியார் வினைதீர் மருந்து, அகல கில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை யுறை மார்பன், உலக முண்ட பெரு வாயன்.

"இன்றிப் போக இரு வினையும் கெடுத்து
ஒன்றி யாக்கை புகாமை உய்யக் கொள்வான்
திருவேங்கடம் நீள் நிலத்து உள்ளது
சென்று தேவர்கள் கை தொழுவார்களே."

திருவேங்கடம் பக்தி யுலகத்தின் உன்னதச் சிகரமாக விளங்குகிறது. "வானோர் மனச் சுடரைத் தூண்டும் மலை" யாகவும், "வானோர்க்கும், மண்ணோர்க்கும், வைப்பாகவும்" திருமலை விளங்குகிறது. பழுதொன்றும் வாராமல் விண்

கொடுக்கும் என்றதால் இம் மலையை "யாம் விரும்பும் வெற்பு" என்றார்கள் ஆழ்வார்கள்.

கூனன், குருடன், முடவன், ஊமை ஆகிய நால்வர் தேச யாத்திரை செய்துகொண்டு திருவேங்கடமலையை அடைந்தார்கள். குருடன் மற்றவர்களில் ஒருவன் கோல் பிடிக்க வழி பார்த்துச் செல்லுவான். கூனன், கூனிக் கூனித் தள்ளாடிச் சென்றான். முடவன் பொய்க் கால் உதவி கொண்டு நொண்டி நடந்தான். ஊமை பிறர் வாய்மூலம் வழி விசாரித் தறிந்ததைக் கொண்டு மேலே சென்று கொண்டிருந்தான்.

மலையேறியதும் அவர்களில் பெரிய மாறுதல் ஏற்பட்டதாம். கூனனுடைய கூன் நிமிர்ந்துவிட்டு அவன் ஓடத் தொடங்கினான். அதைவிட ஆச்சரியம் குருடன் கண் பெற்று, "அதோ தேன் கூடு?" என்று காட்டினானும். பக்கத்திலிருந்த முடவன் திடீரென்று அப்படி குருடன் காட்டிய மரத்தில் ஏறி விட்டானும். அவன் முடம் தீர்ந்துவிட்டதாம். அருகே இருந்த ஊமை "தேன் எனக்கு" என்று கேட்கிறான். ஊமைக்கும் பேச்சு வந்துவிட்டது. திருப்பதி தல யாத்திரையின் மகிமைதான் என்னே! தீராத வினை யெல்லாம் தீர்ப்ப வல்லவர் எங்கள் பெருமாள். ஆனால் அவர் நாம் கேட்டு வரம் கொடுப்பதில்லை. தானாகவே எண்ணிச் செய்கிறார் என்பது பெரியோர் கருத்து.

"கூன் கொண்டு போனவன் கூன்
    நிமிர்ந் தோடக் குருடன் கொம்பில்
தே னென்று காட்ட முடவன்
    குடங் கொண்டு அத்தேன் பிழிய
தான் நின்ற ஊமை எனக் கென்று
    கேட்க, தருவர் வரம்
வான் நின்ற சோலை வடமலை
    மேல் நின்ற மாயவரே."

---



அழகர் கோயில் (உட்புறத் தோற்றம்)

# அழகர் கோயில்

'அறிவெல்லையால் அறியப்படாத புகழுடனே விளங்கி, புலவர்களால் பொதுவாகப் போற்றப் பெற்ற குன்றுகள் பல. அக் குன்றங்களில் மாந்தரது பசியைப் போக்கி நிறை பயன் களை யெல்லாம் எப்போதும் பெற அருளும் குன்றுகள் மிகச் சில. அச் சிலவற்றுள் தெய்வங்கள் விரும்பும் தடமலர்ப் பொய்கைகளையும் மதி தவழ்ச் சிகரங்களையும் உடைய குன்று கள் சிறந்தன. அவற்றுள் கடலும், கானலும் போல வேறு வேருகிய நிலத்தினையும், சொல்லும் பொருளும் போல வேறு படாத தொழிலினையும் உடைய மாயோனும் அவன் முன்னோ னை பலராமனும் எழுந்தருளியிருக்கும் இருங்குன்றம் மிகச் சிறந்தது' என்கிருர் இளம் பெருவழுதியர் என்ற பாண்டிய குலத் தோன்றல். மக்களால் பெறுதற் கரிய துறக்கத்தை அக் குன்றத்தை அடைந்தால் பெறலாம். எனவே அக்குன்றை அனைவரும் அறியப் போற்ற வேண்டுகிருர். பரிபாடல் என்ற எட்டுத் தொகை நூல்களில் ஒன்றில் புலவர் இக் கருத்தை வெளியிடுகிருர்.

> ''சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்
> சோலை யொடு தொடர் மொழி மாலிருங்குன்றம்''

என்று அக் குன்றின் பெயரைப் புலவர் கூறுகிருர். அழகு பொருந்திய 'திரு' வென்னும் சொல்லும், 'சோலை' என்னும் சொல்லும், 'மாலிருங்குன்றம்' என்னும் சொல்லும் தொடர்ந்த மொழியாகிய 'திருமாலிருஞ் சோலை மலை' என்பது அதன் பெயர்.

இத் தலத்தை 'அழகர் கோயில்' என்று பெருவழக்காகக் கூறுவர். மதுரைக்கு வடக்கே பதினெட்டு மைல் தூரத்தில் உள்ளது. இங்கே புலவர் காலத்தில் பலராமனும், கிருஷ்ண னும், சங்கர்ஷண வாசு தேவர்களாகக் கோயில் கொண்டிருந் தார்கள். கடலும், கானலும் போலும் உருவத்தால் இருவ

ரேனும் தொழிலால் ஒருவரே என்று புலவர் கூறும் உவமை நயம் போற்றற் குரியது.

புலவர் இயற்கை அழகிலே ஈசனைக் காண்கிறார் ; வெண் கடம்ப மாலை பலராமனது மார்பில் அசைந்து ஆடுவது சிலம்பாற்றில் ஆர்த்து அசைந்து இழியும் அருவியின் இயற்கை யழகில் கண்டு மகிழ்கிறார். சுனையெலாம் நீல மலர் மலர்ந்திருக்க, சுனையைச் சூழ்ந்து செயலை (அசோக மரம்) மலர் மலர்ந்திருக்கிறது. காய் கனிகளோடு நிறம் மாறுபட வேங்கையும் மலர்ந்திருக்கிறது. அந்த இயற்கைக் காட்சிப் புலவருக்கு இயற்கைத் தெய்வமாகிய கண்ணபிரானை நினை வூட்டுகிறது. நீல மலரைச் சூழ்ந்த செயலை மலர் அவன் பொன்புனை உடுக்கையை நினைவூட்டும். குன்றத்தில் மலர்ந்த வேங்கை அவன் மணி முடியை நினைவூட்டும். அக் குன்றம் புலவருக்குத் திருமாலாகவே காட்சி யளிக்கிறது. எனவே அவர் உலகத்தவரை நோக்கி, சென்றேனும், கண்டேனும், திசை நோக்கித் தொழுதேனும் வழிபடும்படி கூவி யழைக்கிறார்.

'' இருக குன்றத் தடி யுரை யியைகென
பெரும் பெய ரிருவரைப் பரவுதுந் தொழுதே.''

என்று அக் குன்றத்தின் அடியில் உறைந்து அப் பெரு மானைத் தரிசித்தலே தமக்கு வேண்டுவது எனக் கூறி முடிக் கிறார்.

சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் அழகர் கோயிலைத் 'திருமால் குன்றம்' எனக் குறிப்பிடுகிறார். அவர் வாழ்ந்த கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இங்கே பலராமர் கண்ணனோடு வணங்கப்பட்டதாகத் தெரியவில்லை. அவர் குறிப்புக்கள் திருமாலை மாத்திரமே குறிக்கின்றன. வடக்கிலி ருந்து அழகர் மலைக்குச் செல்ல இடப் பக்கத்து மார்க்கம் கணவாய் வழியென்றும், அம் மார்க்கத்தில் 'புண்ணிய சரவணம், பவகாரணி, இட்ட சித்தி' என்ற மூன்று தீர்த் தங்கள் உண்டு என்றும், அவ் வழியே செல்ல விரும்பினால் ஆங்கு மலையில் கோயில் கொண்டிருக்கும் பெரியோனது சேவடிகளைத் திரிகரணங்களால் தொழுது மும்முறை வலம்

வருதல் வழக்குண்டென்றும் அடிகள் கூறுகிறார். 'வலமுறை யெய்தி மறுவுதல் வழக்கே' என்று இவ் வழக்கத்தை நம்வாழ் வாரும் கூறு நிற்பர்.

" மற்றவை நினையாது மலை மிசை நின்றோன்
பொற்றாமரைத் தாளுள்ளம் பொருந்துமின்
உள்ளம் பொருந்துவிராயின் மற்றவன்
புள்ளணி நீள்கொடிப் புணர்நிலை தோன்றும்
தோன்றிய பின் அவன் துணைமலர் தாளிணை
யேன்று துயர் கெடுக்குமின்பமெய்தி"

என்று, 'நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி யிருக்கும் திருமாலின் பொற்றாமரை போன்ற திருவடிகளை உள்ளத்துக் கொண்டு அப் பெருமானது கருடப் புள்ளெழுதிய மரத்தைக் கண்ட வளவில் அவன் திருவடி நிலைப் பிறவித் துன்பத்தை நீக்கும். அதன் பலம் பரமபதம் எய்துவதாகும்' கூறுகிறார். சிலப்பதிகார காலத்திலும் இத் தலம் மிகப் புகழ் பெற்றிருந்தது இவற்றால் அறியலாம்.

சமணர்கள் பழங்காலத்தில் மிகுதியும் தங்கி வாழ்ந்த எட்டு மலைகள்,

" பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி
அருங்குன்றம் பேராந்தையானை-இருங்குன்றம் "

என்று ஒரு பழைய வெண்பா கூறுகிறது. இருங்குன்றம் என்ற மாலிருஞ்சோலை மலையில் சமணர்களும் பௌத்தர்களும் வாழ்ந்தனர் என்று மேற்கண்ட வெண்பாவை ஆதரித்து அடியிற்கண்ட திருமங்கை மன்னன் பாசுரம் கூறுவது காணலாம்.

"புந்தியில் சமணர் புத்த ரென்றிவர்கள்
ஒத்தன பேசவு முகந்திட்
டெந்தை பெம்மானு ரிமையவர் தலைவர்
எண்ணி முன்னிடங் கொண்ட கோயில் "

என்ற பாடல் அச் சமண பௌத்தர்கள் அழகரைப் பலபடிப் பேசிப் போந்தனர் என்று கூறுகிறது. இப்பொழுது 'பஞ்ச

பாண்டவர் 'படுகை' என்று வழங்கும் அழகர் மலைக் குகைகளில் பல பிராகமி சாஸனங்களும், ஜைன சாஸனங்களும் காணப்படுவது இக் கூற்றை வலியுறுத்தும்.

'தென்னனுயர் பொருப்பு' என்ற திருமாலிருஞ் சோலை மலையும் 'தெய்வ வடமலை' என்ற திருவேங்கட மலையும் பூமி தேவியின் 'முலையா வடிவமைந்த' என்கிறார் திருமங்கை மன்னன். 'தேசமெல்லாம் வணங்கும் திருமாலிருஞ்சோலை, என்று திருமங்கை மன்னனும், 'தென்கொள் திசைக்குத் திலத மன்ன திருமாலிருஞ்சோலை' என்று நம்மாழ்வாரும்,

"குலமலை கோலமலை குளிர் மாமலை கொற்றமலை
நிலமலை நீண்டமலை திருமாலிருஞ்சோலை மலையதே"

என்று பெரியாழ்வாரும் கூறுவது இம் மலை எட்டாம் நூற்றாண்டில் பெருமையுடன் விளங்கியதைக் குறிப்பனவாகும்.

அம் மலைமீது ஆயிரமாறுகளும், சுனைகள் பல வாயிரமும் ஆயிரம் பூம் பொழில்களும் இருந்ததாகக் கூறுகிறார் பெரியாழ்வார். மலைமீது 'அறுகால் சிறுவண்டுகள் ஆயிரம் நாமம் சொல்லிச் சிறுகாலைப் பாடு' வதையும், ஈட்டிய பல் பொருள்கள் எம்பிரானுக்கு அடியுறையென்று ஓட்டரும் தண் சிலம்பாறு பாய்வதையும், குறமாதர்கள் பண் குறிஞ்சிப் பாவொலி பாடி நடம் பயில்வதையும், எல்லாவிடத்திலும் எங்கும் பரந்து பல்லாண்டொலி ஒலிப்பதையும் பல்லாண்டு பாடிய பட்டர்பிரான் எழுத்தோவியத்தால் தீட்டியுள்ளார். தென் கூடற் கோனுகிய கூர்வேற்கோன் நெடுமாறன் அழகர் மலையை ஆதரித்து வந்தான்.

"புனைத்தினை கிள்ளி புதுவவிக் காட்டியுன்
பொன்னடி வாழ்க வென்று
இனக் குறவர் புதிய துண்ணும்
எழில் மாலிருஞ் சோலை"

என்று அம் மலையில் வாழும் மக்கள் அறுவடையான புதிய தினைகளை அழகருக்கு அளித்துப் பிறகே மற்றவையை வீட்டுக்கு எடுத்துச் செல்லும் வழக்கையும் ஆழ்வார் கூறுகிறார்.

சோலைமலை நம்பிக்கு ஆண்டாள்,

"நூறுதடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளுங்
கொலோ?"

என்று விண்ணப்பித்துக் கொண்டாள். அவளுடைய அபிலாஷையை ராமாநுஜர் பூர்த்தி செய்து வைத்தார் என்பர்.

நம்மாழ்வார் காலத்தில் இம் மலையில் யானைகளும், மான்களும், மயில்களும், சுனைகளும், சோலைகளும் நிறைந்திருந்தன. இளமை வளர்ந்து கொண்டிருக்கிற அந்தச் சோலைகளில் 'வளரொளி மாயேன்' கோயில் கொண்டிருக்கிறார். இந்த மலைக்கோயிலை, இளமை கெடுவதன் முன்னமே தரிசித்துத் தளர்ச்சியை ஒழித்து விடும்படி உபதேசம் செய்கிறார் நம்மாழ்வார். வானமுகட்டை முட்டும் சிகரங்களின் மீது சந்திரன் படிந்து செல்வான்.

"சந்தொடு மணியும் அணிமயில் தழையும்
தழுவிவந்து அருவிகள் நிரந்து
வந்திழி சாரல் மாலிருஞ்சோலை
வணங்குதும் மட நெஞ்சே."

என்று நெஞ்சை நோக்கிக் கூறுகிறார் திருமங்கை மன்னன். வைகுந்தம், பாற்கடல், வேங்கடம் முதலிய கோயில்போல் 'வண்டு வளங்கிளரும் நீள் சோலை' மலையும் அவர் உகப்புடன் வாழும் திருப்பதி என்கிறார் பேயாழ்வார்.

"வெற்பென்றிருஞ் சோலை வேங்கடமென்றிவ் விரண்டும்
நிற்பென்று....................."

அதாவது மாலிருஞ் சோலை, திருவேங்கடம் என்ற இரண்டு மலைக் கோயில்களிலும் எம்பெருமான் திருவுள்ள முவந்து கோயில் கொண்டிருக்கிறான் என்கிறார் பூதத்தாழ்வார்.

அழகர் மலை சூழ்ந்த நாடு இரணிய முட்டம் என்று வழங்கி வந்தது. கீழிரணிய முட்டத்தைச் சார்ந்தது அழகர் மலை. மலைத் தொடர்களும், அவற்றின்மீது வானளாவ உயர்ந்த விருக்ஷங்கள் சூழ்ந்த இயற்கைக் காட்சிகளுக்கிடையே, அடிவாரத்தில் பக்தர்களது மனச் சுடரைத்

தூண்டி நிற்கிறது கோயில். மலைமேல் மூன்று மைலில் நூபுர கங்கை நீர்வீழ்ச்சியுள்ளது.

''சந்தொடு காரகில் சுமந்து தடங்கள் பொருது
வந்திழியும் சிலம்பாறு''

என்று ஆண்டாளும்

''சிலம்பார்க்க வந்து தெய்வமகளிர் களாடும் சீர்
சிலம்பாறு''

என்று பெரியாழ்வாரும், 'தெள்ளருவி கொழிக்கும் சிலம்பிய லாறு' என்று திருமங்கை மன்னனும் இந்தப் புண்ணிய நதியைப் போற்றுதல் காண்க. இந் நதி சில இடங்களில் மெல்லவும், சில இடங்களில் வேகமாக நுரைத்துக்கொண்டும் செல்வது காண வெகு அழகாய் இருக்கும். அருவி விழு மிடத்தில் மேலே மண்டபம் கட்டி யிருக்கிறார்கள். இங்கிருந்து குழாய்கள் மூலமாக ஜலம் மலையடிவாரத்துக்குக் கிடைக் கிறது.

கோயிலுக்கு வெளியே பல இடிந்த கட்டடங்களும். பிரம்மாண்டமான மதிற் சுவர்களும் காணப்படுகின்றன. இவை நாயக்க மன்னர்களின் பழைய அரண்மனையாகவும், கோட்டையாகவும் இருந்திருக்கவேண்டும். கோயிலுக்குப் பிரவேசிப்பதற்கு முன் காணப்படும் ராஜ கோபுரம் மொட்டையாக இருக்கிறது. பெரிய கோபுர வாயில் எப் பொழுதும் மூடப்பட்டிருக்கும். மதிளில் உள்ள ஒரு வாயில் வழியாகப் பஸ்களும், மோட்டார்களும் செல்லுகின்றன. கோபுர வாயிலில் 18ஆம் படி கருப்பன் காவலிருக்கிறான். மலையாளத்திலிருந்து அழகர் திருவாபரணங்களைத் திருட வந்த பதினெட்டு கள்வர்களின் தலைவன் கருப்பண்ணன். இக் கள்வரை, படிக் கொருவராகப் பலியிட்டார் அழகர். கடைசியாகக் கருப்பண்ணன் அழகரைச் சரணமடைந்தான். அவன் உயிரைக் காப்பாற்றித் தன் சந்நிதியைக் காக்கும்படி ஏவினார் அழகர். அன்று முதல் சந்நிதியில் காவல் புரிந்து வருகிறான் கருப்பண்ணன். ஆடி அமாவாசையன்று கருப் பண்ணனுக்கு விசேஷ நாள். பலர் முடிப் பிரார்த்தனைக்கு

இங்கே வருவார்கள். சித்திரா பௌர்ணமியன்று அழகர் வைகையாற்றுக்கு எழுந்தருளுவார். கருப்பண்ணன் சந்நிதி முன்னால் அழகர் அணிந்துள்ள நகைகளின் ஜாபிதா கணக்கெடுக்கப்படும். திரும்பி வரும் பொழுதும் இவ்வாறே நகைகள் ஜாபிதாவை இங்கே கணக்கெடுப்பார்கள்.

கோயிலுக்குச் செல்லும் பிரதம வாயிலுக்குமுன் நாயக்க அரசரால் கட்டப்பட்ட அழகிய மண்டபம் ஒன்று இருக்கிறது. திருமாலின் அவதார மூர்த்திகள் தூண் சிற்பங்களில் காண்கின்றார்கள். சிற்பங்கள் மிகுந்த வேலைப் பாடுடையன. நரசிம்ம மூர்த்தி, இரணியனுடன் யுத்தம் செய்வதும், மடியில் வைத்து வதம் செய்வதும் சிலையில் நடைபெறுகின்றன. கோயிலின் வாயிலில் இருபுறத்திலும் துவார பாலகர் சிலைகள் உள்ளன. உள்ளே சென்றதும் தங்கம் வேய்ந்த 'புள்ளணி நீள் கொடி புணர் நிலை' தோன்றுகிறது. த்வஜஸ்தம்பத்தைத் தாண்டி, படிகளேறி மூலஸ்தானத்தின் முன்மண்டபத்திற்குச் செல்கிறோம்.

கருப்பக் கிரஹத்தில் 'வள ரொளி மாயோன்' நாச்சியார்களோடு நின்ற திருக் கோலமாகக் காட்சி யளிக்கிறார். முன்னால் உற்சவ மூர்த்தி யிருக்கிறார். 'வஞ்சகக் கள்வன் மா மாயன்' என்று ஆழ்வார் மங்களா சாஸனம் செய்தருளியதால் 'கள்ளழகர்' என்ற திருநாமம் பெருமாளுக்குண்டு. கள்ளர் வணங்கும் கடவுளாக விளங்கியதால் 'கள்ளழகர்' என்ற நாமம் வழங்குகிற தென்றும் கூறுவர். 'கானமும் வானரமும் வேடுவர்க்கும் முகம் கொடுக்கும் நீர்மையிறே இங்கு' என்று மிலேச்ச ராஜ்யத்தை ரட்சிக்கும் குண பூர்த்தி திருமாலிருஞ் சோலையில் என்று பூருவாசாரியர் கூறுவர். அழகரைச் 'சங்கத் தழகர்' என்றும் 'தண்டமிழ்ச் சங்கத் தனியிறைவன்' என்றும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கூறுவர். இறைவன் மாலிருஞ் சோலையில் பேரழகுடன் தங்குவானேன் என்ற கேள்விக்கு விடை பகர்ந்த எம் பெருமானார், 'நம்மாழ்வார் போன்ற நற்காதலடியவர் மண்மிசையே மண்ணுடம்புடன் கடுக அப்பனுடைய பேரழகைக் கலங்காப் பெருநகர வைகுந்தத்தில் புள்ளரசு, அரவரசு ஆகியவர் போன்ற இடையா இமையவர் நேரி

லுணர்ந்து இன்புறுவதுபோல் உணர்ந்து இன்புறுவதற்கே' என்றாராம்.

பிரளய காலத்திலும் நிலைத்திருக்க எண்ணிய தரும தேவதை, திருமாலை நோக்கித் தவம் புரிந்து மலை வடிவம் கொண்டு அப் பிரானைத் தன்மீது கொண்டு விளங்கிற்று, என்று கூடற் புராணம் கூறும். மூலஸ்தானத்தின் மேலுள்ள சோம சந்திர விமானம் பொன்னால் வேயப்பட்டிருக்கிறது. பிராகாரம் சுற்றி வந்தால் முன்மண்டபத்தில் இடும்பன் சந்நிதி யுள்ளது. விபூதிப் பிரசாதம் கிடைக்கும். தாயார் சுந்தரவல்லி நாச்சியார். தல விருக்ஷம் சந்தனமரம். மலயத்வஜ பாண்டியனுக்கும், தரும தேவதைக்கும் பிரத்தியக்ஷம் என்பர்.

அழகர் கோயில் தோசையை வெகுநாள் கெடாமல் வைத்திருக்கலாம். வருடத்திற்கொரு முறை சித்திரை உற்சவத்தன்று அழகர் மதுரைக்குப் பல்லக்கில் எழுந்தருளுவார். வைகை யாற்றில் தங்கி, பிறகு குதிரை வாகனத்தில் ஊருக்குத் திரும்புவார். உற்சவம் கண்டருளி ஊருக்கு மீளும்போது நாச்சியார் ஊடல் கொள்ளுவதால் ஆடிப் பிரம்மோற்சவ சாற்றுமுறைவரை பிராகாரத்திலுள்ள மூலை மண்டபத்தில் எழுந்தருளி, திருவாராதனம் கண்டருளுவார். பிரம்மோற்சவமும், தெப்போற்சவமும் வெகு விமரிசையாக நடைபெறும்.

அழகர் மலையை 'முருகப் பெருமானது படை வீட்டுத் தலங்களுள் ஒன்றான' 'பழமுதிர் சோலை' என்பர். அனாதி காலமாக அழகர் மலையை, திருமால் குன்றமெனத் தமிழ் நூல்களும், சாஸனங்களும் கண்டிருக்கின்றன. பக்தர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும், இயற்கை அழகை விரும்புபவர்களுக்கும் தனித் தனியும் ஒருங்கு இன்பம் தரும் தலம் அழகர் மலை.

---

# பழனி

மேற்குத் தொடர்ச்சி மலையின் கிளை யொன்றுகத் திகழ்கிறது பழனிமலை. வராககிரி, கோடைக்கானல் தொடர்களை நோக்கி இரண்டு பள்ளத்தாக்குகளும், பழனியை அம் மலைகளிலிருந்து பிரிக்கும் சிகரங்களும் உள்ளன. வையாவிபுரி ஏரி ஒரு புறம் பழனி மலையை அலங்கரிக்கிறது. இதற்கிடையில் முருகன் கோயில் பழனிமலை உச்சியை அலங்கரிக்கிறது. பழனி மலையின் உயரம் 450 அடி ஆகும். கீழ்ப் பழனியே சமுத்திர மட்டத்திற்கு 1068 அடி உயரத்திற்கு மேல் உள்ளது. திண்டுக்கல்லிலிருந்து ரயில் மார்க்கமாக 40 மைல் தூரத்தில் பழனி இருக்கிறது.

இத் தலத்தின் பெயர் வரலாறு மிக விநோதமானது. மாம்பழப் பந்தயத்தில் தோற்ற முருகக் கடவுள் தாய் தந்தையார்மீது கோபித்துக் கொண்டு கயிலையை விட்டுப் பழனி மலைக்கு வந்து சேர்ந்தார். சிவபெருமானும், பார்வதி தேவியும் முருகனைத் தேடிக் கொண்டு திருவாவினன்குடி வந்து சேர்ந்தார்கள். பார்வதி தேவியார் முருகனை நோக்கி 'நீயே பழம்', 'பழம்நீ', 'ஞானப் பழம் நீ' என்று அன்பொழுக அழைத்தார்கள். ஆனுல் முருகனே கோபம் தீர்ந்தானில்லை. திருவாவினன்குடியிலேயே தங்கி விட்டான் என்பது கதை. 'பழம்நீ' என்று அம்மையார் அழைத்தமையால் அத் தலம் 'பழனி' என்று பின்னுளில் மருவி வழங்கிற்று என்பர்.

வேளாவிக் கோமான் என்ற வேளிர் தலைவனுடைய தலைநகர் பொதினி.

''முடிவுறழ் திணி தோணெடு வேளாவி
பொன்னுடை நெடு நகரப் பொதினி''

என்று கூறுகிறது அகநானூறு (61). எனவே பொதினியே நாளடைவில் மருவி பழனியாகிற் றென்பர் சிலர்.

"வண்டு படத் ததைந்த கண்ணி யொண்கழ
லுருவக் குதிரை மழவ ரோட்டிய
மருக நற்போர் நெடுவேளாவி
யறு கோட்டி யானைப் பொதினி யாங்கண்"

என்ற அகநானூற்றுப் பாடலும் இதை யாதரித்து நிற்கும்.

பழனி, தாலூகாத் தலைநகராக உள்ளதால் அங்கே ஜில்லா முனிசீப் கோர்ட்டு, சர்க்கார் வைத்தியசாலை, உயர் நிலைப்பள்ளி ஆகியவை இருக்கின்றன. சுமார் 30,000க்கு மேற்கொண்ட ஜனத்தொகையை உடைய முனிசிபல் நகராக அது விளங்குகிறது. மலை மேலும் அடிவாரத்திலும் பல சத்திரங்கள் யாத்திரிகர் வசதிக்கென அமைக்கப்பட்டிருக்கின்றன. நாள்தோறும் யாத்திரிகர்கள் பிரார்த்தனை செலுத்த வந்துகொண்டே யிருப்பார்கள். பால் காவடி, சந்தனக் காவடி, புஷ்பக் காவடி முதலியவை விசேஷம்.

கிரி வீதி பழனி மலையைச் சுற்றி ஓடுகிறது. இது சுமார் ஒரு மைலுக்கு இருக்கிறது. கிரிப்பிரதட்சிணம் மிக விசேஷம் என்று கருதப்படுகிறது. சித்திரை வைகாசியில் அக்னி நட்சத்திரத்தின்போது வலம் வருவார்கள். கிரி வீதியின் நான்கு திருப்பங்களிலும் நான்கு மண்டபங்கள் இருக்கின்றன. அவற்றில் பெரிய மயிலின் கற்சிலைகள் வைத்திருக்கிறார்கள். இந்தக் கிரி வீதிச் சுற்றில் கிராம தேவி அழக நாச்சியம்மன் கோயில் இருக்கிறது. வீதியைச் சுற்றி நந்தவனங்களும், பொழில்களும் நெருங்க அமைந்திருக்கின்றன.

வையாவிபுரி ஏரி மலையடிவாரத்திலிருக்கிறது. ஆனால் யாத்ரிகர் ஷண்முகா நதியில் தீர்த்தமாடித்தான் மலை யேறுவார்கள். இது ஊருக்கு இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. காவடி செலுத்துபவர்கள் இங்கிருந்துதான் காணிக்கைகளை எடுத்துச் செல்வார்கள். முருகனுக்கு அபிஷேக தீர்த்தம் அருகேயுள்ள வரத்தாற்றிலிருந்து கொண்டு போகப்படுகிறது. கடம்பு இங்கே தல விருக்ஷம். கிரி வீதியின் இரு புறங்களிலும் கடம்ப மரங்கள் கவிந்து நிற்கின்றன.

பழனி தல புராண வரலாறு மிக ரசமாயுள்ளது. அகத்திய முனிவர் கயிலைக்குச் சென்றபோது, சிவபெருமான் அவரிடம் சக்திகிரி, சிவகிரி என்ற இரண்டு மலைகளைக் கொடுத்து அவற்றைப் பொதிகை மலைக்கு எடுத்துச் செல்லும்படி கூறினார். அவ்வாறே அகத்தியர் அவற்றைத் தன் சீடனாகிய இடும்பனிடம் கொடுத்துப் பொதிய மலைக்கு எடுத்துச் செல்லும்படி கட்டளை யிட்டார். இடும்பன் அம் மலைகளை இரண்டு புறமாகக் காவடியாகக் கட்டித் தோளில் வைத்துக்கொண்டு புறப்பட்டான். வழியில் திருவாவினன்குடிக் கருகில் காவடியை இறக்கி வைத்துச் சிரம பரிகாரம் செய்து கொண்டான். பிறகு கிரிகளைத் தூக்க முயன்றபோது அவை பூமியில் பதிந்து விட்டிருந்தன. சிவகிரியின் உச்சியில் கோவணாண்டியாய், கையில் தண்டேந்தி ஓர் இளைஞன் நிற்பதைக் கண்டான். இடும்பன் தன் குறையை அவனிடம் கூறினான். ஆனால் இளைஞனோ அது தன் குன்றெனக் கூறினான். கோபங் கொண்ட இடும்பன் இளைஞனைத் தாக்கினான். இளைஞன் இடும்பனைக் கீழே வீழ்த்திவிட்டான். அப்போது அகத்தியரும், இடும்பன் மனைவியும் அங்கே தோன்றி முருகன் அருளை வேண்டி நின்றார்கள். முருகப் பெருமான் மாண்ட இடும்பனை உயிர்ப்பித்தார். முருகனிடம் இடும்பன் இரண்டு வரங்கள் வேண்டிக்கொண்டான். ஒன்று, தான் அவருக்கு வாயிற்காப்போனாக அமர வேண்டுமென்பது, இரண்டாவது தன்னைப்போல் காவடி எடுத்துச் செல்பவர்களுக்கு முருகபிரான் அருள் செய்ய வேண்டுமென்பது. முருக பிரான் உவந்து அவ் விரண்டு வரங்களையும் அவனுக்கு அருளினார். அன்று முதல் காவடி செலுத்தும் வழக்கம் ஏற்பட்டதென்பர்.

மலையேறுபவர்கள் முதலில் மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் சந்நிதிக்குச் செல்வார்கள். மீனாக்ஷி மண்டபத்தில் பாளையக்காரர்களுடைய உருவச் சிலைகள் இருக்கின்றன. ஸ்ரீபாத விநாயகரைச் சேவித்துவிட்டு அரியர் மண்டபத்திலுள்ள வள்ளியம்மனைத் தரிசித்துக்கொண்டு மலையேறுவார்கள்.

மலையேறிச் செல்ல சுமார் 700 படிகள் இருக்கின்றன. இடையிடையே மண்டபங்களும் உள்ளன. இவை பிற்காலத்

தவை. மலைக்குச் செல்ல முன்புறம், பின்புறம் ஆக இரண்டு வழிகள் உண்டு. வழி நெடுக மின்சார விளக்குகள் உண்டு. இவ்வயன்றி கோயில் யானை முதலியவற்றை அழைத்துச் செல்லக் காட்டுப்பாதை யொன்றும் உண்டு. அந்தப் பாதையில் காஞ்சச் சுனை என்ற வற்ருத நீர்ச்சுனை யிருக் கிறது.

படிகள் ஏறிச் சென்ருல் வழியில் இடும்பன் கோயில் இருக்கிறது. முருகன் பாதத்தடியில் இடும்பன் நிற்கும் பாவனையான சிலை கோயிலில் இருக்கிறது. ஒரு சிவலிங்கமும் அகத்தியரும் பக்கத்தில் இருக்கின்றனர்.

மலைமேல், மதிற் சுவர் சுற்றி ஓடுகிறது. மதிளுக்குட் புறம் பெரிய முற்றமும், பிரயாணிகள் தங்கும் சத்திரங்கள் சிலவும் இருக்கின்றன. முற்றத்தைச் சுற்றி வந்தால் கோயிலுக்குச் செல்லும் வாயிலை அடைகிருேம். உள்ளே சென்றதும், த்வஜஸ்தம்பமும், அதற்கு முன்னல் அக்கினி குண்டமும் இருக்கிறது. பக்கத்தில் வல்லப கணபதி காட்சி யளிக்கிருர்.

மணிக்கட்டு மண்டபத்தின் வழியாகக் கோயிலுக்குள் செல்லலாம். உள் முற்றத்திலுள்ள ராஜகோபுரம் ஐந்து அடுக்கு கொண்டது. வாயிலைக் கடந்ததும் தேவஸ்தான காரியாலயம் ஒரு புறமும்; தக்ஷிணமூர்த்தி, மலைக்கொழுந்து சிவன், மலை நாச்சியார் முதலியோர் சந்நிதிகள் ஒருபுறமு மாகக் காணப்படும். மேலுள்ள வாயில் நவரங்க மண்ட பத்திற்கு அழைத்துச் செல்லும். இந்த மண்டபத்தைச் சிற்ப வேலைகளமைந்த பன்னிரண்டு தூண்கள் தாங்கி நிற் கின்றன. இந்த மண்டபத்தைத் தாண்டி அர்த்த மண்ட பத்துக்குச் செல்லவேண்டும். அதைத் தாண்டித்தான் கர்ப்பகிரஹம் இருக்கிறது. அதற்குமேல் அழகிய ஸ்தூபி இருக்கிறது.

இந்த மலைமேல் முதன்முதலில் போகர் என்ற ஒரு சித்த ரின் ஆஸ்ரமம் இருந்தது. அவர் தன்னை நாடி வந்தவர் களுக்கு மருத்துவ உதவி செய்து வந்தார். அவர் நாடிய வர்க்கு ஞான குருவாயும் விளங்கினர். தண்டாயுதபாணி யின் விக்ரகத்தை அவரே முதலில் இங்கே பிரதிஷ்டை செய்

தவர் என்கிறார்கள். விக்ரகம் நவலோகங்களால் அமைந்த தென்பர். புலிப் பாணியின் வழியில் வந்த கன்னட உடையார் போக சித்தருடைய சீடராய் இருந்து பூஜைகளை நடத்தி வந்தார். சேரமான் பெருமாள் நாயனார் இந்தக் கோயிலின் அர்த்த மண்டபத்தையும் மூலக்ரகத்தையும் கட்டினார் என்கிறார்கள். மூலஸ்தானத்தின் தென்புற மதிற் சுவரில் குதிரைமீது ஆரோகணித்த ஒரு வீரன் உருவம் காணப்படுகிறது. அது சேரமான் பெருமாளே யென்பர். மலையின் சிறிது கீழே சேர விநாயகர் மண்டபத்தில் காணப் படும் உருவமும் அவருடையதே என்பர். நாயனார் முருகர் கோயிலுக்கு நிறைய மானியங்கள் அளித்தாரென்பர். மலையாளிகள் பலர் இங்கு விஜயம் செய்கிறார்கள். நாயனார் காலத்திலிருந்தே ஆலயத்திற்குப் பக்தர்கள் திரளாக வருவது வழக்கம் எனப்படுகிறது.

திருமலை நாயக்கருடைய தளகர்த்தனான ராமப்பையன் பழனியில் அஷ்ட பந்தன கும்பாபிஷேகம் செய்து ஆதி சைவ சிவாசாரியர்களைக் கோயில் குருக்களாக ஏற்படுத்தினான்.

வேலாயுதபாணி, கையில் தண்டேந்தி நின்ற கோலமாகப் பால்ய மூர்த்தியாக மேற்கு நோக்கிக் காட்சியளிக்கிறார். பழனியப்பன் உருவம் பார்க்கப் பரமானந்தக் காட்சியாக இருக்கும். அவர் பார்க்கும் திசையெல்லாம் க்ஷேமமாக விளங்குகிறது. பிற்காலப் பாண்டியர், கிருஷ்ணதேவராயர் முதலியோர் கல்வெட்டுக்கள் ஆலயத்தில் உள்ளன. முருக னுக்குத் தேன், பழம், பால், சந்தனாபிஷேகங்கள் நடை பெறும். பழனி பஞ்சாமிருதம் நெடுநாள் கெடாமல் வைத் திருக்கலாம்.

போக சித்தர் சந்நிதி, மலைக் கோயிலின் உட்பிராகாரத் தின் தென்மேற்கே இருக்கிறது. புவனேஸ்வரி என்ற நவ துர்க்கையும், மரகதலிங்கமும் இங்கே இருக்கின்றன. இங்கி ருந்து முருகன் சந்நிதிக்குப் பாதாள பிலம் ஒன்று செல்கிறது. இப் பிலத்தின் வழியாகச் சென்ற போகர் திரும்பவில்லை என் கிறார்கள். புலிப்பாணி வமிசத்தில் வந்தவர் போக சித்தர் சந்நிதிக்குப் பூசை செய்து வருகிறார். இதைச் சேர்ந்த மட மொன்று கீழே இருக்கிறது.

தைப்பூச உற்சவம், பங்குனி உத்தர உற்சவம், அக்கினி நட்சத்திர உற்சவம் மிக ஆடம்பரமாய் நடக்கும். வெள்ளித் தேர் மிகுந்த அழகுடையது. பழனி மலைக்குப் பக்கத்தில் வராககிரி இருக்கிறது. பெண் பன்றி வடிவெடுத்துப் பன்றிக் குட்டிகளுக்குச் சுந்தரேசர் பால் கொடுத்த இடமாதலால் வராககிரி எனப் பெயர் பெற்றதென்பர்.

மலையடிவாரத்தில் ஆவினன் குடித்தலம் இருக்கிறது. பத்துப் பாட்டுள் ஒன்றான திருமுருகாற்றுப்படை இத் தலத்தி லெழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப்பற்றி விரிவாகப் பாடியுள்ளது. திருவாகிய திருமகளும், ஆவாகிய காமதேனு வும், இனனாகிய கதிரவனும் பூசித்தமையால் திருவாவினன் குடி எனப்பெயர் பெற்றதென்பர். ஆவியர் குலத்தினருக் குரிய தலைநகராக இருந்ததுபற்றி ஆவினன் குடியென்று பெயர் பெற்றதெனல் பொருந்தும். நச்சினார்க்கினியர் 'இனிச்சித்தன் வாழ்வென்று சொல்கிற ஊர் முற்காலத்து ஆவினன் குடியென்று பெயர் பெற்றதென்றுமாம்' என்று எழுதுவர். சித்தன் வாழ்வு 'இல்லந்தொறும் மூன்றெரி யுடைத்து' என்று ஔவையார் பாடியுள்ளாள். இதன்படி 'சித்தன்' என்ற பெயர் முருகனுக்கு வழங்கிற்று என்று அறுதியிடுகிறார், நச்சினார்க்கினியர்.

இங்கே தல விருக்ஷம் நெல்லிமரம், தீர்த்தம் சரவணப் பொய்கை. குமரன் குன்று தோறாடலில் ஆவினன் குடியை மூன்றாவதாகப் பாடுகிறார் நக்கீரர். ஆவினன் குடியில் எழுந்தருளியிருக்கும் முருகனைத் தரிசிக்கும் பொருட்டு முனிவர், கந்தருவர், அரம்பையர், திருமால், சிவன், இந்திரன் ஆகியோர் வருகிறார்கள். இவர்கள் ஏதோ காரி யார்த்தமாகவே முருகனை அணுகுகிறார்கள். அப்போது, முருகன் விரும்பும் முனிவர்களை முன்னனுப்பிப் பின்னால் செல்கிறார்கள். இம் முனிவர்கள் மிகச் சிறந்தவர்கள்.

" ............................................இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும்
கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம் வரம்பு ஆகிய தலைமையர், காமமொடு
கடுஞ்சினம் கடந்த காட்சியர் "

ஆகிய முனிபுங்கவர் முன்னால் செல்கிறார்கள். முருகனுக்கு இசைந்த இசையைப் பாடும் வழக்குடைய கந்தருவர் பின்னால் பாடிக்கொண்டு வருகிறார்கள். அவர்கள் கையிலே, காதிலே வைத்துப்பார்த்துச் சுருதி கூட்டிய யாழ். அவர்கள் பெண்டிரும் சேர்ந்து பாடிக்கொண்டு வருகிறார்கள்.

"பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ் சிறைப்
புள்ளணி நீள் கொடிச் செல்வனும்,"

பாம்புகள் இறக்கும்படியாக அடிக்கும் பலகோடுகளை உடைய வளைந்த சிறகைப் பெற்ற கருடக் கொடியை உடைய திருமாலும்,

"உமை யமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்,"

உமாதேவியார் ஒரு பாகத்தே தங்கி விளங்குபவனும் இமையாத முக்கண்ணை உடையவனும், திரிபுரத்தை அழித்த வல்லமை மிக்கவனுமாகிய சிவபெருமானும்,

"தாழ்பெருந் தடக்கை உயர்ந்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்"

தாழ்ந்த, வளைந்த கையை உயர்த்தியதுமாகிய ஐராவதத்தின்மேல் ஏறிய திருமகள் கடாட்சம் பெற்ற இந்திரனும், பிரம்மனைச் சிறையிட்ட பிள்ளைப் பெருமானுடைய முனிவைத் தீர்த்து அவரைச் சிறைமீட்க வருகிறார்கள். ஏனெனில் சிருஷ்டித் தொழில் நடைபெற்றால்தான், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களும் செவ்வனே நடைபெறும்.

எனவே வேண்டுவோர்க்கு வேண்டுவன ஈயவே முருகன்

"தாவில் கொள்கை மடந்தை யொடுசின்னாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன்."

சிறந்த கற்பொழுக்க முடைய தெய்வயானையொடு ஆவினன்குடியில் தங்கியிருக்கிறான் என்கிறார் நக்கீரர்.

அருணகிரிநாதர் பழனி முருகன்மீது 65 திருப்புகழ் பாடியுள்ளார். சைவாகம பாடசாலை ஒன்றும் பழனியில் நடத்தப்படுகிறது.

பழனிக்கு மேற்கே ஒன்பது மைலில் 'அயிரமலை' என்ற மலையிருக்கிறது. பஞ்சபாண்டவர் இங்கே வனவாசத்தைக் கழித்ததாகக் கூறப்படுகிறது. 'பஞ்ச பாண்டவர் படுகை' என்ற இடத்தில் சமண முனிவர்கள் கி. பி. முதலாம் நூற்றாண்டில் வசித்து வந்தார்கள் என்று கூறப்படுகிறது. தீர்த்தங்கார்களுடைய சிலைகள் குடைந்த கல் மண்டபங்களில் காணப்படுவது இதை வலியுறுத்தும். பழனி மிகப் பழைய தலம். திருப்பதி மலையைப்போல் பல யாத்ரிகர்களை வசீகரிக்கிறது.

# திருப்பரங்குன்றம்

மதுரைக்குத் தென்மேற்கே நான்கு மைல் தூரத்தில் திருப்பரங்குன்றம் என்ற மலைக்கோயில் இருக்கிறது. முருகனது படைவீடுகளில் ஒன்றாக நக்கீரரால் பாடப்பட்ட பெருமையுடையது இம் மலை. குன்று, கடல் மட்டத்திற்கு மேல் 1050 அடி உயரம் ஓங்கியுள்ளது. குன்றம் சிவலிங்க வடிவமாக அமைந்திருப்பதால், மக்கள் இக் குன்றைச் சிவலிங்கமாகக் கருதி வழிபாடாற்றி வந்தனர். முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள தலமானதுபற்றி ஸ்கந்தர் மலை என்ற பெயரும் இதற்குப் பெருவழக்காக வழங்கிவந்தது. குன்றைச் சுற்றி அடிவாரத்தில் ஊர் இருக்கிறது. பத்துப் பாட்டு, பரிபாடல் முதலிய நூல்களிலிருந்து திருப்பரங் குன்றத்தைப்பற்றிய பல வரலாறுகள் கிடைக்கின்றன.

முகம்மதியர்கள் திருப்பரங்குன்றத்தைத் தங்கள் மலையென்று கூறுகிறார்கள். கோயிலுக்கு அருகே அவர்கள் மசூதியொன்று இருக்கிறது. மலைமேல் சிறிது தூரம் சென்றால் இரண்டு பெரிய பாறைகளுக்கிடையே ஒரு சமாதி யிருக்கிறது. சுல்தான் சிக்கந்தர் பாட்சா என்ற ஒரு பக்கிரி அங்கே அடக்கம் செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. முஸ்லிம்கள் அம் மலைப்பகுதியைச் சிக்கந்தர் மலை என்று அழைக்கிறார்கள். சமாதிக்கு முன்னால் அமைந்துள்ள மண்டபம் இந்து முறையில் இருக்கிறது. ஆனால் மேலே உள்ள கூருருளை ஸ்தூபிகள் இஸ்லாமியக் கட்டிடப்படி அமைந்திருக்கிறது.

மலையின் தென்பகுதியில் சிறிது உயரத்தில் மீன் படகு போன்ற ஒரு பாறை இருக்கிறது. அந்தப் பாறையின் ஒரு பகுதி ஆகாயத்தை நோக்கி உயர்ந்திருக்கிறது. அப் பாறையில் நின்றவண்ணமாக இரண்டு திகம்பர சமண உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. பாறையின் சிறிது தூரத்தில் ஆழமான சுனை ஒன்று இருக்கிறது.

" பரங்குன் ெறுருவகம் பப்பாரம் பள்ளி
அருங்குன்றம் பேராந்தை யானை—இருங்குன்றம் "

என்று சமணர் பெரிதும் தங்கி வாழ்ந்த மலைகள் எட்டு என ஒரு பழைய வெண்பா கூறுகிறது. திருப்பரங்குன்றம் முதலிய எட்டு மலைகளிலும் சமணர் ஆதிக்கம் பெற்று வாழ்ந்து வந்தனர் என்று மலையிலுள்ள சாஸனங்கள் கூறுகின்றன. கூன்பாண்டியன் என்ற அரசன் முதன்முதலில் சமணனாக விருந்தான் என்று பெரிய புராணம் கூறுகிறது. எனவே அவன் ஆதரவைப் பெற்றே சமணர் இம் மலைகளில் வாழ்ந்து வந்தனர் எனலாம்.

தென்பாகத்திலுள்ள காசிவிஸ்வநாதர் ஆலயத்தில், விஸ்வநாதர், விசாலாட்சியம்மன், கணேசர், சுப்ரமண்யர், பைரவர் முதலியோர் சிலா விக்ரகங்கள் பாறையில் உள்ளன. பிரம்மதேவர் பஞ்சலிங்கத்துக்குப் பக்கத்தில் பூசை செய்கிறார்.

மலையடிவாரத்தில், தென் புறத்திலே, கல்லில் குடையப்பட்ட குகைக் கோயில் ஒன்றிருக்கிறது. இதை உமையாண்டவர் கோயில் என்கிறார்கள். கோயில் உயரம் 9 அடிதான். 17 அடி சதுரம் கொண்டது. பாறையின் பின் சுவரில் நடராஜர் தாண்டவம் காணலாம். மிருதங்கத்தோடு விஷ்ணுவும், காளியும் நிற்கிறார்கள். சிற்பங்கள் கீழ்ப் புறமாகச் சிதைந்திருக்கின்றன. மற்றொரு சுவரில் வள்ளி, தெய்வயானை சமேதராக முருகக் கடவுள் இருக்கிறார். இந்தக் கற்கோயில் மிகப் பழைமையானதாகக் காண்கிறது. திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டையில் பல்லவ மகேந்திர வர்மனால் (கி. பி. 610-640) கட்டப்பட்ட குடைவரைக் கோயிலைப் போன்றிருக்கிறது. ஆனால் பல்லவக் கல்வெட்டுக்கள் காணப்படவில்லை. மாரவர்மன் சுந்தர பாண்டியன் (கி. பி. 1215-35) அளித்த மானியங்களைப் பற்றிய கல்வெட்டுக்கள் கற்கோயிலின் கிழக்குப் பாகத்தில் காணப்படுகின்றன.

மேற்குப் பாகத்தில் செங்குத்தான மலைப் பகுதியின் உச்சியில் இரண்டு குகைகள் உள்ளன. குகையில் ஆறு படுக்கை.

கள் கற்பாறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. பெள பிக்ஷுக்கள் கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னிருந்தே இக் குகையில் வாழ்ந்து வந்தனர் என்று குகைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இந்த மலே ஏறுவது கடினமாயிருக்கும்.

மலேயடிவாரத்தில் வட பகுதியில் முருகன் சந்நிதி இருக்கிறது. கோபுர வாயிலுக்கு முன்னுல் சிற்ப வேலேப் பாடமைந்த 48 தூண்கள் கொண்ட மண்டபம் இருக்கிறது. தூண்களின் உயரம் சுமார் 20 அடி ஆகும். திருமலே நாயக்கரால் கட்டப்பட்ட இம் மண்டபத்தைச் சுந்தர பாண்டியன் மண்டபம் என்று கூறுகிருர்கள். மண்ட பத்தைத் தாண்டிச் சென்றதும் உள்ளே த்வஜஸ்தம்பகூடம் இருக்கிறது. அங்கிருந்து படிகள் மேலேறிச் செல்லும். மேலே முருகன், திருமால், துர்க்கை, விநாயகர், சிவன் ஆகியோர் மூலஸ்தானங்களும் அர்த்த மண்டபங்களும் கல்லில் குடையப்பட்டிருக்கின்றன. மேலே பல மண்ட பங்கள் இருக்கின்றன. பிரதான மண்டபத்தில் அரியநாத முதலியார், திருமலே நாயக்கர் ஆகியோரின் கற்சிலேகள் காணப்படுகின்றன. இம் மலே, அரணுகப் (பதினெட்டாம் நூற்றுண்டில்) பயன் பட்டது என்று கூறுகிருர்கள்.

திருப்பரங்குன்றம் ஓர் ஆரோக்கியத் தலமாகவும் விளங்கு கிறது. மலேயில் பல சுனேகளும் தீர்த்தங்களும் உள. அவற் றில், கோயிலிலுள்ள 'சந்நியச்சி' என்ற கிணற்றின் ஜலம் நீரிழிவு முதலிய வியாதிகளேப் போக்கவல்லது என்கிருர்கள். மலேயைச் சுற்றிப் பாதை ஒன்று செல்கிறது. திருவிழாக்களும், ஊர்வலங்களும் மலேயைச் சுற்றிவரும் காட்சி விநோதமாய் இருக்கும். மதுரைக்கும் திருப்பரங்குன்றத்துக்கும் பஸ்ஸு கள் அடிக்கடிச் செல்கின்றன.

திருமுருகாற்றுப்படை தோன்றியதற்கே திருப்பரங் குன்றம் காரண பூதமாய் விளங்கிய தென்பர். சிவபூசையை மறந்திருந்த நேரத்தில், கற்கிமுகி என்கிற பூதம், நக்கீரரைச் சிறைப்படுத்தித் திருப்பரங்குன்றிலுள்ள பாதாளச் சிறையில் அடைத்துவிட்டது. அங்கே முன்னமேயே 999 பேர்கள்

சிறைப் பட்டிருந்தனர். ஆயிரம் பேராக உண்ண விரதம் பூண்டிருந்தது பூதம். இந்த வரலாற்றைச் சிறைப்பட்டவ ரிடமிருந்து அறிந்த நக்கீரர் முருகன்மீது திருமுருகாற்றுப் படையைப் பாடினார். கந்தக் கடவுளும் மனமிரங்கி, பூதத்தைக் கொன்று அனைவரையும் காப்பாற்றியதாக வரலாறு. இனி, பாட்டைக் கவனிப்போம்.

> '' திருவீற்றிருந்து தீது தீர்நியமத்து
> மாடமலி மறுகிற் கூடற்குடவயின் ''

என்று திருமகள் வீற்றிருந்த அங்காடி வீதியையும், மாடங் கள் மலிந்த வீதியையும் உடைய கூடல் மாநகரத்தின் மேற்கே உள்ள குன்றம் என்று நக்கீரர் கூறுவதிலிருந்து இக் குன்றம் திருப்பரங்குன்றம் என்று தெளியப்படுகிறது.

நக்கீரர் இயற்கைக் காட்சிகளைக் கண்டு அவற்றின் இன் பத்திலே திளைத்தவர். காலைக் கதிரவன் நீலக் கடலினின்றும் உலகம் உவப்பப் பலரும் புகழச் செங்கதிர் வீசி எழுகின்ற காட்சி நீலமயில்மீது செம்மேனி முருகன் தோன்றுகிற காட்சியை அவருக்கு நினைவூட்டுகிறது. சூரிய உதயம் புற இருளைப் போக்கி உலகில் ஒளியைப் பரப்புவதுபோல் முருக உதயம் அக இருளைப் போக்கி நல்வழி காட்டுகிறது.

> ''உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரும்
> பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு
> ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர் ஒளி ''

என்று புலவர் அந்தக் காட்சியைச் சித்திரித்துக் காட்டுகிறார். அவனுடைய தாள்கள்,

'உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன்றாள்' அடைந்த வரைப் பாதுகாத்து, அறியாமையைப் போக்கும் வலியைப் பெற்றவை.

> ''செறுநர்த் தேய்ந்த செல்உறழ் தடக்கை,''

போரிட வரும் பகைவர்களை அழித்து, இடியையும்போல் கடுமையும் தப்பாமல் கொல்லும் தன்மையுடையன அவன் கரங்கள். போகத்துக்குரிய மாலையாகிய கடம்பினையும்,

வீரத்துக்குரிய மாலையாகிய [illegible]யும் அணிந்து விளங்கு கிருன் வேலன்.

"அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல் வலம் அடங்க கவிழ் இணர்
மாமுதல் தடுத்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேய்."

பேய் மகள் துணங்கைக் கூத்து ஆடும்படி முருகன் சூர சம்ஹாரம் செய்வதை அழகுபெற வர்ணிக்கிருர் நக்கீரர். குதிரை முகமும் மனித வடிவமும் ஆகிய இருபெரு வடிவைப் படைத்த சூரனை ஆறு முகங்களோடு சென்று அசுரர் வெற்றித் திறம் அழிந்து ஒழிய பூங்கொத்தையுடைய மாமரத்தை வெட்டி வீழ்த்தினுன். முருகன் புகழைப் பாடி அவன் அருள்பெறச் செல்லும் பக்தனை ஆற்றுப் படுத்துகிருர் நக்கீரர்.

"இருஞ் செற்று அகல் வயல் விரிந்து வாய்அவிழ்ந்த
முட்டாள் தாமரைத் துஞ்சி, வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி ஏற்படக்
கண் மலர்ந்த காமரு சுனை மலர்
அஞ்சிறை வண்டினம் அரிக்கண் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதல் உரியன்........."

கரிய சேற்றில் மலர்ந்த தாமரை மலரில் தூங்கி, அதி காலையில் தேன்பரந்த நெய்தல் மலரை ஊதி, சூரிய உதய மானதும் மலர்கின்ற பூக்களின்மீது அருஞ்சிறை வண்டுகள் ரீங்காரம் செய்யும் குன்றத்தில் அமர்ந்திருக்கிருர் என்று அவன் எழுந்தருளியவாற்றைக் கூறி முடிக்கிருர் நக்கீரர்.

திருமூர்த்திகளும், தேவர்களும் முருகக் கடவுளைத் தரி சிக்கும் பொருட்டுத் திருப்பரங்குன்றத்துக்கு எழுந்தரு ளினுர்கள். இதனுல் திருப்பரங்குன்றம் இமயமலையை யொத்து நிற்கிறது. அம் மலையிலுள்ள அருவி சரவணப் பொய்கையை ஒத்திருக்கிறது என்கிருர் நல்லழுசியார்.

"பரங் குன்றமியக் குன்ற நிகர்க்கும்
இமயக் குன்றினிற் சிறந்து

நின்னின்ற நிறையிதழ்த் தாமரை
மின்னீன்ற விளங்கின ரூழா
ஒருநிலைப் பொய்க்கையோ டொக்கும் நின்குன்றம்.''

என்பது பாட்டு. திருப்பரங்குன்றத்தில் நடைபெறும் வள்ளியம்மைத் திருமண விழாவிற்குப் பாண்டியன் தன் மந்திரிமாரோடும், உரிமை மகளிரோடும் சென்று கோயிலை வலம் வருகிறான். அக் குன்றத்தில் சித்திர சாலையொன்று இருக்கிறது. அங்கே, நாண்மீன்களையும், தாரகைகளையு முடைய சூரியன் முதலான கோள்களுடைய நிலையைக் குறிக்கும் சித்திரம் ஒன்று இருக்கிறது. பக்கத்தில் இரதி, காமன் இவர்கள் சித்திரம். காதலர்கள், சித்திரங்களைக் காதலிமாருக்குக் காட்டி விளக்கம் செய்துகொண்டு போகிறார்கள்.

'' இந்திரன் பூசை யிவளகலிகை யவன்
சென்ற கவுதமன் சினனுரக் கல்லுரு
ஒன்றியபடி.''

பூனையுருக் கொண்ட இந்திரன், அகலிகை, கவுதமன் முனிவன் கோபத்தால் கல்லுருவான பெண் என்று சித்திரங்களை மொழி பெயர்த்துச் சொல்வதைப் பாட்டில் காண்கிறோம். குன்றம் புதனார், திருப்பரங்குன்றத்தின் அருகே ஒரு சித்திரவம்பலம் இருந்ததாகக் கூறுகிறார். இதுதான் நல்லழுசியார் கூறும் சித்திர சாலையாதல் வேண்டும். வையையாற்றுப் பாடல்களிலும் திருப்பரங்குன்றத்தையும் அக் குன்றில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானைப் பற்றியும் பல வரலாறுகள் கூறப்படுகின்றன. தமிழ் நாட்டுப் பழங் கடவுளான முருகன் திருவிளையாடல்களைச் சங்க நூல்கள் போற்றுவதைப் படித்து இன்புற நாம் மிகுந்த பாக்கியம் வாய்ந்தவர்கள்.



சிதம்பரம் சபாநாயகர் ஆலயம்

# சிதம்பரம்

**வை**ணவர்களுடைய 'கோயில்' ஸ்ரீரங்கம். சைவர்களுடைய 'கோயில்' சிதம்பரம் சபாநாயகர் ஆலயம். முன்னையது பூலோக வைகுந்தம், பின்னையது பூலோக கயிலாயம்.

> '' கருது செம்பொனினம் பலத்திலோர்
> கடவுணின்று நடிக்குமே
> காவிரித் திருநதியிலே யொரு
> கருணைமாமுகி றுயிலுமே.''

என்று நடராஜாவும் ரங்கராஜாவும் தில்லையிலும், திருவரங்கத்திலும் சோழ மண்டல வாழ்க்கையை விரும்பிக் கோயில் கொண்டிருப்பதாகச் சோழமண்டல சதகம் கூறுகிறது.

சிதம்பரத்தின் பழம் பெயர் தில்லையென்பது. தில்லை செடிகள் நிறைந்த காடாயிருந்ததுபற்றித் தில்லையெனப் பெயர் பெற்றது போலும். வியாக்கிர பாதர் பூசித்த தலமாதல்பற்றிப் புலியூர் என்ற ஒரு பெயரும் கொண்டதாயுள்ளது. பெரும்பற்றப் புலியூர் என்று நாயன்மார்கள் பாடியுள்ளார்கள். நடராஜர் கோயிலுக்குப் பிறகு சிற்றம்பலம் என்று அழைக்கப்பட்டது. பொன்வேய்ந்த பிறகு பொன்னம்பலம் என்றும் அழைக்கப்பட்டது. இறைவனுடைய நிர்த்த சபையையும், சுயம்பு லிங்கத்தையும் கொண்ட ஞான ஆகாசமாகச் சிதம்பரம் கருதப்படுகிறது.

தில்லை சபாநாயகர் ஆலயம் தோன்றிய விதம் பின்வருமாறு: மத்யாந்தின முனிவரின் புதல்வரான வியாக்கிர பாதர், வேத சாஸ்திர பண்டிதராயும் சைவ ஆகமங்களை ஓதியுணர்ந்தவராயு மிருந்தார். பரம்பொருளை நோக்கித் தவம் புரியத் தில்லைக்கு வந்தார். அங்கே சிவகங்கைப்

பொய்கைக் கரையில் ஓர் ஆலமரத்தையும் அதனடியில் ஒரு லிங்கத்தையும் கண்டார். தாமும் ஒரு லிங்கத்தைப் பக்கலில் ஆவாகனம் செய்து தியானத்தில் அமர்ந்தார். மரங்களில் ஏறிப் பூசைக்கெனப் பூக்கள் பறிக்க வலிமை பொருந்திய புலியின் கால்களைச் சிவபெருமான் அருளால் பெற்ருர். ஒரு நாள் அவர் யோகத்திலிருக்கும்போது சிவ பெருமான் தாருக வனத்தில் நடம்புரியும் காட்சி அவருக்குப் பிரசன்னமாயிற்று. அன்று முதல், அந்த நடனத்தைப் பார்க்கவேண்டுமென்று அவர் விரும்பினுர்.

தவ வலிமையால் செருக்குற்றுத் தாருக வனத்து ரிஷிகள் சிவபெருமானை விலக்கி ஒரு யாகம் செய்தார்கள். அவர்கள் கர்வத்தை அடக்கச் சிவபெருமானும், திருமாலும் முறையே பிட்சாடனர், மோகினி வடிவுடன் யாகசாலையை அடைந் தனர். தாருக வனத்து ரிஷி பத்தினியர், பிட்சாடனர்மீது மையல் கொண்டு அவர் பின்னுல் சென்றனர். திருமாலின் மோகினி வேஷத்திலே முனிவர்கள் அறிவிழந்தனர். மயக்கம் தெளிந்த பின்னர் உண்மையை உணர்ந்த அம் முனிவர்கள் ஒரு யாகம் செய்தார்கள். யாகத்தினின்றும் தோன்றிய புலியை அவர்கள் சிவபெருமான்மீது ஏவி ஞர்கள். சிவபெருமான் அப் புலியைக் கொன்று அதன் தோலை யுரித்து ஆடையாகத் தரித்துக்கொண்டார். அதன் பின்னர் யாக குண்டத்தினின்று, பாம்புகள் தோன்றிச் சிவ பெருமான்மீது சீறி வந்தன. இறைவன் அவற்றைப் பிடித்து மாலைகளாக அணிந்து கொண்டார். பிறகு நடனம் புரிய ஆரம்பித்தார். அப்போது முயலகன் என்ற குறுகிய அசுரன் யாக குண்டத்தினின்றும் தோன்றிச் சிவபெருமானை எதிர்த்தான். கால்கட்டை விரலால் அவனை அடித்து மோதி அவன்மீதே நடம்புரிந்தார் இறைவன். முனிவர்கள் பீதி யடைந்து இறைவனைச் சரணமடைந்தார்கள். இவ் வர லாற்றை விஷ்ணு மூர்த்தி ஆதிசேஷனுக்குக் கூறினுர். ஆதிசேஷனுக்கு அந்த நடனத்தைப் பார்க்க மிகுந்த ஆவல் ஏற்பட்டது. பாதி நரவடிவு, பாதி சர்ப்ப வடிவோடு ஆதிசேஷன் தில்லைக்கு வந்து நடனத்தைக் காணத் தவம் புரிந்து கொண்டிருந்தார்.

சிவபெருமான் இவ் விருவரையும் கடாட்சிக்க வேண்டித் தில்லைக்கு வந்தார். ஆனால் கிராம தேவியாகிய தில்லைக்காளி இவருக்கு இடம் கொடுக்க மறுத்தாள். முடிவில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. சிவபெருமானும், காளியும் நடனம் புரிவதென்றும், முடிவில் தோற்றவர் ஊரைவிட்டுச் சென்று விட வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. ஊர்த்வ தாண்டவமாடிச் சிவபெருமான் காளியை நடனத்தில் தோற்கடித்தார். காளி ஊருக்கு வெளியே தில்லை வனத்திற்குச் சென்றுவிட்டாள். இப்பொழுதும் காளி கோயில் அங்கு இருக்கிறது. அவள் மகா வரப்பிரசாதியாக விளங்குகிறாள்.

சிம்ம வர்மன் என்ற சோழ அரசன் பெரு வியாதியால் பீடிக்கப் பட்டிருந்தான். வியாக்ரபாதரின் அருட் பிரசாதத்தால் அவ் வரசன் சிவகங்கையில் மூழ்கிப் பிணி முற்றும் நீங்கப் பெற்றான். அவனைப் புலியூரின் அரசனாக வியாக்ரபாதர் முடிசூட்டினார். அவ்வரசன் தன் பெயரை இரணிய வர்மன் என்று மாற்றிக் கொண்டான். இறைவனுக்கு ஓர் அழகான ஆலயம் கட்டினான். இறைவனுக்கு வேண்டிய பூசைகளை முறைப்படி செய்யக் கங்கைக் கரையிலிருந்து மூவாயிரம் அந்தணர்களை வரவழைத்தான். தில்லைக்கு மீண்டவர்கள் 2999 பேர்களா யிருந்தனர். மறைந்த ஒருவர் சபா நாயகர் என அசரீரி கூறிற்று. இந்தத் தீட்சிதப் பிராமணர்களைத் 'தில்லை மூவாயிரவர்' என்று தேவாரமும் திவ்ய ப்ரபந்தமும் கூறும். 'தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கு மடியேன்' என்று தம்மைக் கூறிக் கொள்ளுகிறார் சுந்தர மூர்த்தி சுவாமிகள். ஆதி காலந்தொட்டுச் சபாநாயகர் ஆலயம் தீட்சிதர்களின் தனி உரிமைக் கடங்கிய நிர்வாக மாயிருக்கின்றது.

சிதம்பர ஆலயத்தைப் பற்றிய குறிப்புக்கள் பழைய நூல்களில் இல்லை. சிம்ம வர்மன் என்ற அரசன் சரித்திரக் காலத்தவனாகத் தோன்றவில்லை. கோயில் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில்தான் பிரபல மடைந்திருக்கவேண்டும். கோயில், ஊரின் மத்தியில் இருக்கிறது. கோயில் அடங்கிய நிலம் மாத்திரம் நாற்பது ஏக்கரா பூமியாகும். ஆலயத்தைச் சுற்றி 60 அடி அகலமுள்ள தேரோடும் வீதிகள் நாற்புறமும்

உள்ளன. ஐந்து சபைகளும் சந்நிதிகளின் மத்தியில் மாறி மாறி அமைந்துள்ளன. சிவகங்கைத் தீர்த்தத்துக்குப் பக்கத்தில் நூற்றுக்கால் மண்டபம் இருக்கிறது. இது நரலோக வீரன் என்ற மந்திரிப் பிரதானியால் கட்டப்பட்டது.

திருக்காம கோட்டத்தில் சிவகாமியின் பிரம்மாண்ட ஆலயத்தைக் கட்டியவன் இரண்டாம் குலோத்துங்கன். இவ் வாலயம் சிவகங்கைத் தீர்த்தத்திற்கு மேற்கே யுள்ளது. சுப்ரமணியர் ஆலயம் பாண்டிய நாயகம் என்று கூறப்படுகிறது. இந்த மண்டபத்தில் பல அற்புத வேலைப்பாடுகள் உள்ளன. இம் மண்டபத்திற்கு எதிரே திருத்தொண்டத் தொகை ஈஸ்வரர் சந்நிதி இருக்கிறது. தொகையடியார்களைத் தனித்தனி குறிக்கும் ஒன்பது லிங்கங்கள் அங்கே இருக்கின்றன.

சிற்சபையும் கனகசபையும் உயர்ந்த மேட்டில் உள்ளன. சிற்சபைக்குச் செல்லும் ஐந்து படிகள் பஞ்சாட்சரமாகிய ஐந்தெழுத்தைக் குறிக்கும். கனகசபை சிற்சபைக்கு முன்னுல் உள்ளது. கனகசபையைச் சுற்றி மரக்கதவுகள் உள்ளன. சிற்சபையும் கனகசபையும் பொன்னுல் வேயப்பட்டவை. கனகசபையில்தான் நடராஜருக்கு நித்திய பூஜை நடைபெறுகிறது. சந்திர மௌளீஸ்வர ஸ்படிக லிங்கத்திற்கு அபிஷேக ஆராதனங்கள் கனகசபையில்தான் நடைபெறுகின்றன.

நடராஜருக்குப் பக்கத்திலுள்ள கதவை ஆவரணம் என்பர். சைவ சித்தாந்தம் இதை அவித்தை என்று கூறும். தொண்ணூற்ருறு பலகணிகள் தொண்ணூற்ருறு தத்துவங்களாய் அமைந்துள்ளன. நடுவேயுள்ள நான்கு தூண்கள் நான்கு வேதங்களைக் குறிக்கும். சுற்றியுள்ள மரக் கம்பங்கள் இருபத்தியெட்டும் ஆகமங்களைக் குறிக்கும். இது அனைத்தும் அடங்கிய சபை 'பொன்னம்பலம்.' மனித திரேகத்தின் மத்தியில் இருதயம் இருப்பதுபோல் நடுவில் சிற்சபை இருக்கிறது. இங்கேதான் நடராஜர் ஆனந்த நடம்புரிகிருர். பக்கத்தில் சிவகாமியின் விக்ரகம். மற்ருெரு பக்கத்தில்தான் திரையால் மூடப்பட்ட சிதம்பர ரகசியம். நடராஜர் இதினின்றும் தோன்றினுர் என்பர்.

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரன், சதாசிவன்

ஆகியோர்க்கு ஐந்து பீடங்கள் இருக்கின்றன. ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் என்ற ஐந்து தொழில்களும் சிவ நடனத்தில் நடைபெறுகின்றன. கையில் உள்ள உடுக்கையில் எழுகிறது சிருஷ்டி. அபயகரம் உலகத்தைப் பாதுகாக்கிறது. கையிலுள்ள அனல் சங்காரத்தைக் குறிக்கும். தூக்கிய பாதம் மறைத்தலைக் குறிக்கிறது. தூக்கிய திருவடியை நோக்கி நீட்டப்பட்ட கரம் மோக்ஷ நிலையைக் காட்டும். இவை அனைத்தும் ஒன்றாக இசைந்து ஆடுவது ஆனந்த நடனம்.

"ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்த வாச்சியம்
ஆனந்தமாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந்தானுக்கே."

நடராஜர் சந்நிதிக்கு எதிரே 40 தூண்கள் கொண்ட ஓர் உயர்ந்த மண்டபம் இருக்கிறது. இந்த மண்டபம் நடராஜர் கோவிந்தராஜர் சந்நிதிகளை, நோக்கியவாறு உள்ளது. நடராஜர் சந்நிதிக்குப் பக்கத்திலேயே கோவிந்தராஜர் சந்நிதி இருக்கிறது. இத் தலம் 'திருச் சித்திரகூடம்' என்று ஆழ்வார்களால் பாடப் பெற்றுள்ளது. திருமால் ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டு சிவ நடனத்தைப் பார்த்துக்கொண் டிருக்கிறார். ஆதியில் உயர்ந்த மேடை மேல் இத் திருமால் மூர்த்தம் இருந்திருக்க வேண்டும். நடராஜர் ஆலயத்தோடு தோன்றியவர்தான் கோவிந்தராஜர்.

"மூவாயிரநான் மறையாளர் முறையால் வணங்க
தேவாதி தேவன்திகழ்கின்ற தில்லை திருச்சித்திரகூடம்"

என்று திருமங்கையாழ்வார் பாடியுள்ளார். எனவே ஆழ்வார் காலத்தில் கோவிந்தராஜர் சந்நிதியைத் தீட்சிதர்களே பார்த்து வந்தார்கள் என்று அறியக் கிடக்கிறது. பல்லவ மன்னன் ஒருவன் பைம்பொன்னும் முத்தும் மணியுங் கொணர்ந்து தில்லைத் திருச்சித்திரகூடத்தைப் பணிந்தான் என்று ஆழ்வார் கூறுகிறார்.

"தில்லைநகரத் திருச்சித்திர கூடந்தன் னுள்
அந்தணர் கள்ஒரு மூவாயிரவர் ஏத்த
அணிமணி யாசனத் திருந்த அம்மான்"

என்று இப் பெருமானை ராமனுகக் கண்டு களிக்கிருர் குலசேக ராழ்வார். திருமாலின் திருக்கோலத்தை மாணிக்கவாசகப் பெருமானும் தமது திருக்கோவையாரில் குறித்துள்ளார்.

"கரங் கடந்தா னென்றுகாட்ட
மற்றுங்கதுங் காட்டி டென்று
வரங் கிடந்தான் தில்லையம்பல
முன்றிலம் மாயவனே."

'தில்லை சூழ் திருச்சித்திர கூட மேவிய கோவிந்தராசர்க்குத் தினமுமே கூத்தாடி யாயினுன் சிவன்' என்று பிள்ளைப் பெரு மாளையங்கார் பாடுவர். ஆனுல் இரண்டாங் குலோத்துங்கன் (கி. பி. 1135—1146) நடராஜர் சந்நிதியை விஸ்தரிக்க, கோவிந்தராஜர் விக்ரகத்தைக் கடலில் எறிந்துவிட்டான். இது மதத் துவேஷத்தால் நடைபெற்றது என்றும் கூறலாம்.

"முன்றிற் கிடந்த தடங்கடல் போய்
முன்னைக்கடல் புகப் பின்னைத் தில்லை
மன்றிற் கிடங்கண்ட கொண்டன் மைந்தன்"

என்று இச் செய்தியைத் தக்கயாகப் பரணி கூறும். ராமாநுஜர் இவ் விக்ரகத்தைக் கைப்பற்றித் திருப்பதியில் பிரதிஷ்டை செய்தார் என்று பிள்ளைலோகாம் ஜீயர் கூறுகிருர். ஆனுல் 1539இல் கிருஷ்ண தேவராயரது சகோதரன் அச்சுதராயன் மறுபடியும் கோவிந்தராஜரைத் தில்லையில் முன்னிருந்த இடத் தில் பிரதிஷ்டை செய்தான். வைகானச முறையில் பூசையை நடத்த வைணவ அர்ச்சகர்களை ஏற்படுத்தினுன். ஸ்ரீரங்க ராயன் (கி. பி. 1643) புண்டரீகவல்லித் தாயார் சந்நிதி யைக் கட்டி விமானம் முதலியவற்றைச் சீர்திருத்தம் செய் தான். பின்னுளில் வைணவர்களுக்கும், தீட்சிதர்களுக்கும் ஏற்பட்ட பெரும் பிணக்கை வள்ளல் ராஜா சர் அண்ணுமலை செட்டியார் தீர்த்து வைத்து, கோவிந்தராஜர் சந்நிதிக்குப் பல கைங்கர்யங்கள் செய்தார்.

இப்பொழுது நிருத்த சபையுள்ள இடத்தில்தான் பழைமை யாகக் காளிகோயில் இருந்த தென்கிறார்கள். இம் மண்டபம் மூன்றாங் குலோத்துங்கனால் கட்டப்பட்ட தென்கிறார்கள். மிகுந்த அழகான சிற்ப வேலைப்பாடுகளை இங்கே காணலாம். எட்டு அடி உயரம் கொண்ட ஐம்பத்தாறு தூண்கள் மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. நடன உருவங்கள் பலவற்றை இத் தூண்களில் காணலாம். சிவபெருமானும் காளியும் இங்கேதான் நடனமாடினர் என்பர். இம் மண்டபம் தேரைப் போல் கீழே சக்கரங்களுடன் அமைக்கப்பட்டிருக்கிறது. குதிரைகள் அவற்றை இழுத்துச் செல்வதுபோல் அமைந்துள்ளது.

கீழ்க் கோபுரம் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தது என்கிறார்கள். இந்தக் கோபுர வாயிலில்தான் பச்சையப்ப முதலியார் உருவச் சிலையைக் காணலாம். தெற்குக் கோபுரம் சொக்க சீயன் எழுநிலைக் கோபுரம் எனப்படும். மேல் கோபுரம் சுந்தர பாண்டியன் கோபுரம் ஆகும். பரத நாட்டியக் கலையை விளக்கும் பல சித்திரங்களை இக் கோபுர வாயிலில் காணலாம். தெற்குக் கோபுர வாயில் கிருஷ்ணதேவராயரால் தம் வெற்றிக் கறிகுறியாகக் கட்டப்பட்டது.

திருநாவுக்கரசு சுவாமிகள் தில்லைக்கு இருமுறை சென்றாரென்று கூறப்படுகிறது. மனிதப் பிறவி அவசியம் என்கிறார் சுவாமிகள். ஏனென்றால் குனித்த புருவம், புன்சிரிப்பு, துஷ்டர்களையும் அகங்காரம் பிடித்தவர்களையும் நடுங்கச் செய்யும் அந்தச் சடை, தூக்கிய பாதம் ஆகியவற்றை நடராஜ விக்ரகத்தின்மூலம் காணும் சந்தர்ப்பம் அல்லவா மனிதப் பிறவி.

> ''தரித்த மனத்தவர் வாழ்கின்ற
> தில்லைச் சிற்றம் பலவன்
> சிரித்த முகங்கண்ட கண்கொண்டு
> மற்றினிக் காண்பதென்னே''

சிதம்பரம் போய், தரிசனத்தைக் கண்டால் அதற்குப்பின் காண்பதற்கு ஒன்றுமேயில்லை. அந்த ஆடும் திருவடியைக் கண்ட கண்களைக் கொண்டு காண்பதற்கு என்னதான் இருக்க முடியும் என்பது அவர் முடிவு. 'நாளும் இன்னிசையால்

தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்' தில்லை நடராஜனைக் கண்டு பாடினார்.

சுந்தரரும், சேரமான் பெருமாளும் சேர்ந்து தில்லையில் நடராஜப் பெருமானைத் தரிசித்தனர். சுந்தரர் நடராஜாவை, 'புலியூர் சிற்றம்பலத்தெம் பெருமான்' என்று போற்று கிறார். புவியைக் காப்பது பல்லவர் உரிமை என்றும், பல்ல வர்க்குத் திறை கொடா மன்னவரைப் புலியூர் சிற்றம்பலத் தெம்மான் மறுக்கம் செய்கிறானென்றும் கூறுகிறார்.

மாணிக்கவாசகர் பாடல்களில் பாதி தில்லைக்குரியது. 'அனைத்தொழிகும் தில்லை' என்கிறார் தில்லையை. மணிவாச கன் சொல்ல அழகிய திருச்சிற்றம்பல முடையாரே திருவாச கத்தையும், திருகோவையாரையும் எழுதினார் என்பர். திரு வெம்பாவை தில்லைக்குரியது. மாணிக்கவாசகர் தில்லையில் பௌத்தரோடு வாதம் செய்து வென்றாரென்று கூறப்படு கிறது. நம்பியாண்டார் நம்பிகள், திருநீலகண்ட நாயனார் குலத்தில் வந்த பெண்ணொருத்தியைக் கொண்டு திருமுறை களுக்குப் பண் இசைத்தாரென்பர்.

சிதம்பரம் கோயிலுக்கு மானியங்களோ மோகினி வருமா னமோ கிடையாது. தீட்சிதர்கள் கோயிலைத் தங்கள் சொந்த சொத்தென பாவித்து, தங்கள் வருமான மூலமாகக் கோயிலைப் பார்த்து வருகின்றனர். இங்கே பிரம்மோற்சவத் தைப் பச்சையப்ப முதலியார் ஆரம்பித்து வைத்தார் என்பர்.

---

# திருச்செந்தூர்

தென்னாட்டின் கோடியில் கிழக்குக் கரையோரமாக யாழ்ப்பாணத்தை நோக்கிய வண்ணமிருக்கிறது திருச்செந்தூர். இது முருகப் பெருமானது ஆறுபடை வீடுகளில் ஒன்ருகக் கருதப்படுகிறது. கிழக்கிலும் வடக்கிலும் ஆலயத்தின் மதிற்சுவர்களை மன்னார்குடா அலைக்கிறது. கடல்கள் மோதப்பெற்று விளங்கிய தலமாதல்பற்றி நக்கீரர் இப் பதியை 'அலைவாய்ச் சேறல்' என்று பாடினர் போலும். நக்கீரரால் பாடப்பட்டதால் இத் தலம், அவர் காலமாகிய கி. பி. 2ஆம் நூற்ருண்டுக்கு முற்பட்ட தெனலாம்.

'' வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேல் நிலை இய காமர் வியன்துறை ''

புறம்—55 (18-19)

'' திருமணி விளக்கினலை வாய்ச்
செரு மிகுசே எய் ''

அகம்-266 (20-21)

'' சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்று
மேரகமு நீங்கா இறைவன் ''

சிலப். (25)

''முருகன் தீம்புனல லைவாய்'' ,
(தொல்காப்பியம் களவு சூத்-23. ந. பையுண் மாலையிலும்)

'' நன் செந்தின் மேய வள்ளி மணுளர்க்கு ''

(அப்பர் தேவாரம்)

என்று இத் தலம் பழைய நூல்களில் வழங்கக் காணலாம்.

முருகப் பெருமான், தேவ சேனுபதியாகி, சூரபன்மன், சிங்கமுகன் முதலிய அசுர சர்வாதிகாரிகளைச் சங்கரிப்பதற்கு இங்கே தமது சைனியங்களுடன் தங்கினுரென்று புராணங்கள்

கூறுகின்றன. கடல் மத்தியிலுள்ள சூரபன்மனுடைய வீர மகேந்திரம் என்ற கோட்டையைத் தகர்த்து, அவனையும் சங்கரித்து, தேவேந்திரனுக்குச் சுதந்தரம் அளித்து, இங்கே மயனால் கட்டப்பட்ட ஆலயத்தில் தந்தையாரை வழி பட்டார் என்பர்.

முதன்முதலில், கரையோரத்திலுள்ள சிகப்புச் செங்கற் பாறைகளை அஸ்திவாரமாகக் கொண்டு கல் மலையில் 50 அடி உயரமுள்ள ஒரு பகுதியைக் குடைந்து மூலஸ்தானம் கட்டினார்கள். பிற்காலத்தில்தான் இரண்டாவது மூன்றாவது பிராகாரங்கள் தோன்றின. இப்பொழுதிருக்கும் ஆலயம் மௌன ஸ்வாமி என்பவரால் சமீபகாலத்தில்தான் ஜீர்ணோத் தாரணம் செய்யப்பட்டது.

திருச்செந்தூர் என்னும் சொல்லுக்குப் புனிதமும் வளமும் பொருந்திய வெற்றி நகர் என்பது பொருள். இவ் வூரைப் பாண்டிய சாசனங்கள் திரிபுவனமாதேவி சதுர்வேதி மங்கலம் என்றழைக்கின்றன.

திருச்செந்தூருக் கருகே எட்டுமைலில் மூவேந்தருடைய துறைமுகப் பட்டினமான குலசேகரப் பட்டினம் இருக்கிறது. திருச்செந்தூருக்கருகே புன்னைக் காயல் என்ற இடத்தில் தாமிரபரணி சமுத்திரத்தோடு கலக்கிறது.

கோயிலுக்குச் செல்லும் பாதையில் தூண்டுகை விநாயகர், அகத்தியர் முதலியோர் சந்நிதி உள்ளது. வட மலையப்பப்பிள்ளை மண்டபத்திலிருந்து ஷண்முக விலாசம் வரை பந்தல் உள்ளது. ஷண்முக விலாச மண்டபத்திலிருந்து பிரதான ஆலயத்திற்குப் போகும் வழியிலுள்ள தூண்கள் சிற்ப வேலைப்பாடமைந்தவை. ஆலயம் வடக்குத் தெற்காக 300 அடியும், கிழக்கு மேற்காக 214 அடியும் உள்ளது. பிரதான வாயில் தெற்கு நோக்கியிருக்கிறது. முதற் பிராகாரம் சிவிலி மண்டபம் எனப்படும். தூண்களில் யாளிகள் செதுக்கப் பட்டிருக்கின்றன. அங்குள்ள மண்டபமொன்றில் ஓரே கல்லில் செய்யப் பட்ட பிரம்மாண்டமான சுப்ரமணிய சிலை மயில்மீது இவர்ந்து அசுரரைத் தாக்கும் கோலத்தில் காணப்படுகிறது. எதிரே சூரபத்மனுடைய மார்பில் வேல் பாய்ந்த கோலத்திலுள்ளது. பயங்கரமாகப் பறக்கும் சேவல்

ஒன்றும் எதிரே காணப்படுகிறது. சிலைகள் சிற்பக்களஞ்சியங்களாக விளங்குகின்றன. பிராகாரத்தின் கோடியில் வேங்கடேசப் பெருமாள், சுண்ணச் சிலை பள்ளிகொண்ட பெருமாள், கஜலக்ஷிமி ஆகியோர் சந்நிதிகள் இருக்கின்றன. சந்நிதிகள் மலையில் குடையப் பெற்றவை. பூஜை உண்டு.

இரண்டாவது பிராகாரத்தில் துவஜஸ்தம்பம் இருக்கிறது. ஆறுமுகப் பெருமான், வள்ளி தெய்வானை முதயோரது பஞ்சலோக விக்ரகங்கள் இங்குள்ள சந்நிதியொன்றில் இருக்கின்றன.

ஆலயத்தின் முக்கியச் சந்நிதி செந்தில் முருகனுடையது. கர்ப்பக்கிரகத்தில் முருகனுடைய சிறிய விக்ரகம் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறது. விக்ரகம் மிக அழகு வாய்ந்தது. பக்கத்தில் ஜகந்நாத சிவலிங்கம் இருக்கிறது. இந்த லிங்கமே முருகனால் பூசிக்கப் பட்டவர். முருகன் ஆணையை மேற்கொண்டு மயன் இவருக்காகவே ஆலயத்தையெடுத்ததாக ஐதீகம். இந்தப் பழைய மூலஸ்தானமே பின்னுளில் பாறைகளைக் கொண்டு பலப்படுத்தப் பட்டது. சந்நிதியைச் சுற்றியுள்ள பாம்பறை ஆலயத்தின் பழைமையைக் காட்டும். இந்தச் சுற்றின் கோடியில் பஞ்சலிங்கங்கள் இருக்கின்றன. அர்த்த மண்டபத்தை வீரமகேந்திரனும், வீரபாகுவும் காத்து நிற்கின்றனர். மூலஸ்தானத்திற்கும் தெற்கில் உள்ள அறையில் அலைவாய் உகந்த பெருமாள் விக்ரகம் இருக்கிறது. சந்நிதியில் போத்திமார்கள் அர்ச்சகர்கள்.

மேலக் கோபுரம் யாளி மண்டபத்துக்குமேல் 137 அடி உயரமும், 90 அடி நீளமும், 65 அடி அகலமும் கொண்டதாய் விளங்குகிறது. கோபுரம் ஒன்பது மாடங்கொண்டது. ஒன்பதாவது மாடத்தில் கடிகாரமாளிகை இருக்கிறது. காலமணி தெரிவிக்க இது முன்பு பயன்பட்டது.

பாண்டியர்கள் கல்வெட்டுக்கள் ஆலயத்தில் உள்ளன. அவை கோயிலுக்கு அளிக்கப்பட்ட கொடைகளைக் குறிக்கின்றன. நக்கீர தேவருக்குக் கோயில் இருந்ததாக ஒரு சாஸனம் கூறுகிறது.

கி. பி. 1648இல் முருகனுடைய விக்ரகம் டச்சுக்காரரால் கடலில் எறியப்பட்ட தென்றும், பின்னுல் வேறு விக்ரகம்

இங்கே வடமலையப்பப் பிள்ளையன் என்பவனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட தென்றுங் கூறுகின்றார்கள். வென்றி மலைக் கவிராயர், திருப்புகழ் அருணகிரி நாதர், குமர குருபரர், பகழிக் கூத்தர் முதலாயினோர் திருச்செந்தூரைப் பாடியிருக்கின்றனர். சிறிது தூரத்தில் நாழிக்கிணறு என்ற ஸ்கந்த புஷ்கரணி யிருக்கிறது. முருகன் தன் வேலைப் பதித்த இடத்தில் இவ் வூற்று உண்டாயிற்றென்பர்.

கோயிலுக்கு வடக்கே கடற்கரை யோரமாகக் கல்லும் மணலும் சேர்ந்த குன்றொன்று இருக்கிறது. இந்தக் குன்றிலே குடைந் தெடுத்திருக்கிறார்கள். உள்ளே வள்ளி, தத்தாத்ரேயர் முதலானோர் சிலைகள் யிருக்கின்றன. சந்நிதியைச் சுற்றி வளைந்த பிராகாரத்தில் மலையில் குடைந்து வள்ளி சிலையை வைத்திருக்கிறார்கள். முன்னால் ஒரு 16 கால் மண்டபம் இருக்கிறது. கடலலைகள் குகையை அலைக்கும் காட்சி அற்புதமாகவிருக்கிறது. 'வள்ளி ஒளித்த வள நாடு' என்று குகைப் புறம் அழைக்கப்படுகிறது. டச்சுக்காரர் எடுத்துச் சென்ற விக்ரகம் வடமலையப்பப் பிள்ளையால் 1653இல் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட தென்று ஒரு சாஸனம் கூறுகிறது.

யானைமீது அமர்ந்து ஆறு முகங்களோடு அகிலலோக ஆட்சி நடத்தும் முருகனைப்பற்றிப் பின்வருமாறு வருணிக்கிறார் நக்கீரர்.

> ''மா இருள் ஞாலம் மறுவின்றி விளங்க
> பல் கதிர் விரிந்தன்(று) ஒரு முகம்''

கதிரவன் போல் தோன்றி அந்த முகம் அக இருளையும் புற இருளையும் போக்குகிறது.

> ''எஞ்சிய பொருள்களை ஒருமுகம் ஏமுற நாடி
> திங்களைப் போல் திசை விளக்கும்மே.''

அறிவுக்கு அப்பாற் பட்ட பொருள்களை உலகம் உய்ய உணர்த்துகிறது சந்திரனைப்போல். மற்றொரு முகம் 'ஆர்வலர் ஏத்த' வரம் கொடுக்கிறது. ஒரு முகம் அந்தணரது யாகங்களைக் காப்பாற்றுகிறது. மற்றொரு முகம் துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்கிறது. மற்றொரு முகம்,

'' குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை யமர்ந் தன்றே.''

என்கிறார் நக்கீரர். அவன் திருக்கரங்களும் லோகோபகார மான தொழில்களைப் புரிகின்றன. இவ்விதமாக அழகு, இன்பம், அன்பு யாவற்றையும் பரப்பி அடியவரை ரட்சிக்க முருகன் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கிறான் என்கிறார் நக்கீரர்.

'' அழகான செம்பொன் மயில் மேல் அமர்ந்து
அலைவாய் உகந்த பெருமாளே !
இருளாய துன்பம் மருள் மாயன் வந்து என்னை
ஈர்வது என்றும் ஒழியாதோ ''

என்று அருணகிரி நாதர் மனமுருகப் பாடுகிறார்.

---

# ம து ரை

**பா**ரத நாட்டில் மதுரை யென்று வழங்கும் பதிகள் இரண்டும் மிகப் பழைமையானவை. கண்ணன் பிறப்போடு நெருங்கிய தொடர்புடைய வடதிசை மதுரை மட்ரு என்ற பெயரோடு இன்று வழங்கி வருகிறது.

> '' புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி
> வையை என்ற பொய்யாக் குலக்கொடி ''

என்று காவியப் புகழ் பெற்ற வையை யாற்றின் கரையிலே உள்ளது தென்மதுரை. மதுரையைப் பழந்தமிழ் நூல்கள் 'கூடல்' என்று வழங்கக் காணலாம். அந் நகரிலே தமிழ்ச் சங்கம் நிறுவி முத்தமிழைப் பேணி வளர்த்தனர் பாண்டிய மன்னர்கள். இக் கூடல் மாநகரே பாண்டிய மன்னர்களின் ஆட்சித் தலைநகராக விளங்கியது என்று தாலமி (கி. பி. 140) குறிப்பிடுகிருன். ரோமாபுரியினர் வாணிபத்தின் பொருட்டு மதுரையில் குடியிருந்தனர் என்று பூமியின்கீழ் அகப்பட்ட ரோம நாணயங்களின்மூலம் அறியக் கிடக்கின் றது. 'கபாடபுரம்' என்று பாண்டிய நாட்டை வான்மீகி ராமாயணம் குறிப்பிட்டுள்ளது. பாண்டிய நாட்டின் பெரும் பகுதி கடற் கோளால் அழிந்தபோது கபாடபுரமும் அழிந் தொழிந்தது. பிறகு பாண்டியன் முடத்திருமாறன் மதுரையைத் தலைநகராக அமைத்துக் கொண்டு தமிழ்ச் சங்கத்தை நிறுவினுன் என்பர்.

'தேனுறைத் தமிழும் திருவுறை கூடலும்' என்று தமிழை யும் மதுரையையும் சேர்த்துப் பேசுகிறது 'கல்லாடம்' என்ற நூல். தமிழ் மகள் பாண்டியரது புகழாகிய தொட்டிலிலே துயின்று, சங்கப் பலகையிலே வீற்றிருந்த புலவர்களால் வளர்க்கப்பட்டாள் என்று வரந்தருவார் கூறுவர். சிவபெரு மானும், முருகக் கடவுளும் சங்கமேறித் தமிழாராய்ந்தனர் என்றும், தமிழின் பொருட்டே மீனுட்சிசுந்தரர் பல திருவிளே

யாடல்கள் செய்தருளினர் என்றும் கூறப்படுகிறது. சங்கப் புலவர்கள் பலர் மதுரையில் கூடித் தமிழ் வளர்த்ததற்கு ஆதாரமாக இன்று சங்கத்தார் கோயிலை ஆலயத்துக்குள் காணலாம். சொக்கநாதரைத் 'தென் தமிழ்க் கடவுள்' என்று கல்லாடம் போற்றுகிறது.

''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ்சீரூர் பூவின்
இதழகத்தனைய தெருவ மிதழகத்
தரும் பொகுட்ட னைத்தே யண்ணல் கோயில்''

என்று ஒரு பழம் புலவர் மதுரை மாநகரை ஒரு தாமரை மலருக்கு ஒப்பிடுகிறார். அந் நகரின் தெருக்கள் தாமரையின் இதழ்களை ஒப்பன. ஆலவாயன் கோயில் அத் தாமரையின் பொகுட்டை ஒத்திருக்கிறது என்பது புலவர் கருத்து. ஒரு காலத்தில் பிரமன் உலகிலுள்ள ஊர்களை யெல்லாம் ஒரு தட்டிலும், மதுராபுரியை மாத்திரம் மற்றொரு தட்டிலும் வைத்து எடை போட்டானும். மதுராபுரியின் எடை அதிக மாக யிருந்ததாம். இவ் வரலாறு திருவிளையாடற் புராணம் கூறுவது.

நான்கு பெரிய கோபுர வாயில்களை யுடைய நகரமாகவே பழைய தமிழ் நூல்கள் மதுரையைக் குறிக்கின்றன. மதிலைச் சுற்றி அகழியும், அகழியை அடுத்து நெருங்கிய காட்டுப் பிர தேசமும் ஆகிய பழைய காலத்துக் கோட்டைக்கு வேண்டிய உறுப்புக்களுடன் அமைந்திருந்தது மதுரை. கடம்ப வனத் தில் சிவலிங்கம் இருந்ததைத் தனஞ்சயன் என்ற வணிகன் கூறக் கேட்ட குலசேகர பாண்டியன் காடு திருத்தி அப் பெரு மானுக்குக் கோயில் எடுப்பித்தான். இறைவன் தமது சடை முடியின்மேல் பிறை யிடத்திலுள்ள அமிர்தத்தைத் தெளித்து அவ் வூரைப் புனிதமாக்கினர். எனவே மதுரை என்ற திருநாமத்தோடு அவ் வூர் விளங்குவதாயிற்று. பாம்பு வட்டமாய் வாலை வாயாற் கௌவி எல்லையினைக் காட்டிய தால் ஆலவாய் என்ற பெயர் கோவிலுக்கு உண்டாயிற்று.

மதுரை பஞ்ச சபைகளில் ஒன்றாகிய 'வெள்ளியம்பலம்' எனப்படும். பூலோகத்தில் ஆதிசேஷன் விருப்பத்தின்படி

வெள்ளியம்பலத்திலே சிவபெருமான் ஆனந்தத் தாண்டவம் ஆடினார் என்று புராணம் கூறும். 'கூடல் மாநகர் ஆடிய அமுதை உண்டுகளித்த தொண்டர்கள்' என்று கல்லாடம் இந் நடனத்தைப் பாராட்டும். சிவபெருமான் வழக்கத்திற்கு விரோதமாக வலக்காலைத் தூக்கி ஆடுவது இங்கே விசேஷம். கஜ ஹஸ்த முத்திரை வலக்கையால் பிடிப்பதும் வழக்கி லில்லாதது. நடராஜமூர்த்தம் வெள்ளிக் கவசத்தால் மூடப் பெற்றிருக்கிறது. மேல் கூரை வெள்ளியால் வேயப்பட் டிருக்கிறது.

'பெருநீர் வையை வளநீர்க்கூடல் உடலுயிர்' என்ற படி சொக்கலிங்கப் பெருமான் உயிராகவும், மதுரை அப் பெருமானுகிய உயிர் உறையும் உடலாகவும் உருவகிக்கப்பட் டுள்ளது. 'தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி' என மீனுட்சியம்மையைப் பிள்ளைத் தமிழ் நூல் கூறுகிறது. உமா தேவியார் தடாதகைப் பிராட்டியாகவும், சிவபெருமான் சோமசுந்தர பாண்டியராகவும், முருகக் கடவுள் உக்கிரப் பெருவழுதியாகவும் அவதரித்தனர் மதுரை யிலே என்று குமர குருபர சுவாமிகள் கூறுகிறார். சிவபூசை யின் மேன்மையை மக்களுக்கு அறிவுறுத்த எண்ணிச் சிவ பெருமான் தம்மைத்தாமே இத் தலத்தில் பூசித்தார். அப் பெருமான் 'இம்மையே நன்மை தருவார்' என்ற திருநாமத் தோடு இங்கே எழுந்தருளியுள்ளார். இந்திரன், வருணன், ராம லட்சுமணர் இங்கே பூசித்து வரம் பெற்றனர் என்பர்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் கூன்பாண்டியன் என்ற நின்றசீர் நெடுமாறன் காலத்தில், திருஞான சம்பந்த சுவாமி கள் மதுரைக்கு எழுந்தருளி, சமணரை வாதில் வென்று, சைவ சமயத்தை இங்கே நிலைநாட்டினார். அப்போது சம்பந்தருக்கு மந்திரியாகிய குலச்சிறையாரும், ராணி மங்கையர்க்கரசி யாரும் பேருதவி புரிந்தனர் என்று சேக்கிழார் புராணம் கூறு கின்றது. மும்மையாலுலகாண்ட மூர்த்தி நாயனுரும் மதுரைப் பதியவரே. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் பெருஞ் சிறப்பு பெற்றது இத் தலம்.

நகரத்து நடுவில் மீனுக்ஷி ஆலயம் இருக்கிறது. அதன் மதிலைச் சுற்றி நேர்க்கோடாக எல்லா முக்கியத் தெருக்களும்

அமைந்திருக்கின்றன. வடக்கு மாசித்தெரு ஆலயத்தை அணித்துள்ளது. இந்த நான்கு மாசித் தெருக்கள் வழியாகத் தான் மாசி உற்சவத்தில் ஸ்வாமி பவனி வருவார். மாசித் தெருக்களுக்கு அப்பால் நான்கு ஆவணித் தெருக்களும், அவை அடுத்து நான்கு சித்திரை வீதிகளும் இருக்கின்றன. ஆடித் தெரு மதிளுக்குள்ளேயே இருக்கிறது. மூலஸ் தானத்தைத் தவிர, பிற கட்டிடங்கள் பிற்காலத்தில் நாயக்க மன்னரால் கட்டப்பட்டவையே. பழைய கட்டிடங்கள் யாவும் மாலிக் காபூர் படை யெடுப்பின்போது அழிக்கப் பட்டன.

நான்கு புறமும் உயர்ந்த மதிளும், நான்கு மதிற்புறத் தில் நான்கு வாயில்களும் அவற்றின்மேல் வானளாவிய கோபுரங்களும் உள்ளன. மதிளுக்குள் அடைபட்ட இடம் அகல நீளமாக 730வும் 830வும் அடிகளாக இருக்கும். இதற் குள்ளேதான் சந்நிதிகள், குளம், மண்டபங்கள், மடைப் பள்ளி முதலிய அனைத்தும் இருக்கின்றன. நடுவில் அம்மன், ஸ்வாமி முதலானோர் சந்நிதி இருக்கிறது. மீனாக்ஷியம்மை பாண்டியராஜனது புத்திரி என்றும், பிறக்கும்போதே மூன்று முலைகளுடன் பிறந்தாளென்றும் தல புராணம் கூறுகிறது. அவள் எதிர்காலக் கணவனைக் கண்டவுடன் மூன்றாவது முலை மறைந்து விடுமென்று தெய்வ வாக்கு எழுந்ததென்பர். அதன்படியே சொக்காண்டியைக் கண்டவுடன் மூன்றாவது முலை மறைந்ததென்றும், பிறகு அவர்களுக்குத் திருமணம் நிறைவேறியதாகவும் வரலாறு.

மதிளைச் சுற்றி இரும்புக் குழாய் வேலிக்குள் அழகான தோட்டம் அமைத்திருக்கிறார்கள். பூமிமட்டத்திலிருந்து, தெற்குக் கோபுரம் சுமார் 150 அடி உயரத்தில் இருக்கிறது. வடக்குக் கோபுரம் மொட்டைக் கோபுரம். வடக்குக் கோபுரத்தை மொட்டைக் கோபுரம் என்றே மக்கள் வழக்கச் சொல்லில் வழங்கி வருகிறார்கள். ஆனால் இது முழுக் கோபுரம் தான். மன்னர்களின் திருப்பணிக்குப் பின்பு இந்த மொட்டைக் கோபுரத்தை 6-2-1918 தேதி திருப்பணி துவக்கி 1-7-1923 தேதி முடித்துக் கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள் நாட்டுக் கோட்டை நகரத்தாரான வயிநாகரம் குடும்பத்

தார். யாத்ரிகர்கள் பொதுவாக அஷ்ட சக்தி மண்டபம் வழியாகத்தான் ஆலயத்துக்குட் செல்லுவார்கள். மண்டபத்தின் கோடியில் வாயிலின் இருபுறங்களிலும் கணபதி, ஷண்முகம் ஆகியோர் சிலைகள் இருக்கின்றன. வாயிலைக் கடந்ததும் மீனுக்ஷி நாயக்கன் மண்டபம் இருக்கிறது. ஆறு வரிசை ஒற்றைக்கல் தூண்கள் மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. வழிமுடிய கடைகளுக்கு விடப்பட்டிருக்கின்றன. ஒருபுறம் கோயில் யானை, குதிரை, மாடுகள் ஆகியவை வைத்திருக்கிறார்கள். இதைக் கடந்து முதலிப் பிள்ளை மண்டபத்துக்கு வருகிறோம். இதைக் கடந்து வந்ததும் புகழ்பெற்ற 'பொற்றாமரை வாவி'க்கு வந்துவிடுகிறோம். வாவிக்கு நான்குபுறமும் பெரிய தூண்கள் தாங்கும் மண்டபம் நெடுக மீனுக்ஷியம்மன் சந்நிதிக்கு அழைத்துச் செல்லுகின்றது. இந்த மண்டபங்களின் உட்புறச் சுவர்களில் 64 திருவிளையாடல் களின் கதைகள் சித்திரத்தில் வர்ணத்தால் எழுதியிருக்கிறார்கள். கிளிக்கட்டி மண்டபமும் இங்கேதான் இருக்கிறது. இதன் தூண்கள் ஒரே கல்லால் ஆனவை. அவற்றில் வெகு அழகாக யாளிகளையும் பஞ்ச பாண்டவர்கள் சிலைகளையும் செதுக்கியிருக்கிறார்கள். இந்த மண்டபத்திலிருந்து மீனுக்ஷியம்மன் சந்நிதிக்குச் செல்லுகிறோம். கொடிமரத்தைத் தாண்டியதும் அம்மன் தரிசனம் ஆகும். மீனுக்ஷியம்மை அழகிய இளம் பெண் வடிவில் காட்சி அளிக்கிறாள்.

வடக்கே சென்றால் நடுக்கட்டு வாயிலைத் தாண்டிப் பிரம்மாண்டமான கணபதி காட்சியளிக்கிறார். சொக்கநாதர் ஆலயத்தில் பல சிறு சந்நிதிகள் இருக்கின்றன. ஆதியில் இச் சந்நிதியைக் கடம்ப மரங்கள் சூழ்ந்திருந்ததால் இது கடம்ப வனம் எனப் பெயர் பெற்றது. ஆனால் இப்போது மிகுந்திருப்பது கடம்ப மரத்தின் அடிமரம் ஒன்றுதான். சந்நிதியைச் சுற்றி வரும்பொழுது சங்கப் புலவர்கள் சந்நிதியைக் காண்கிறோம். எல்லாவற்றையும்விட அற்புதமானது

---

ஆதாரம் :


1. கலைமகள் பழைய தொகுதி, உ. வே. சா. கட்டுரை
2. நகரத்தார் சரித்திரம்.

கம்பத்தடி மண்டபம். இங்கே த்வஜஸ்தம்பத்தைச் சுற்றிலும் பிரம்மாண்டமான தூண்களில் மிகுந்த வேலைப்பாடுடைய சிற்பங்களைக் காண்கிறோம். பெரிய ஆகிருதியில் ஒரேகல்லில் வேலை செய்யப்பட்ட சிவநடனம், பத்ரகாளி, வீரபத்திரர் ஆகிய காட்சிகள் ஜீவ களையோடு மயிர்க்கூச் செறியும்படி காட்சி அளிக்கின்றன.

வீர வசந்தராயன் மண்டபம், கல்யாண மண்டபம், ஆயிரக்கால் மண்டபங்களை அங்கேயே காணலாம். ஆயிரக் கால் மண்டபம் அரியநாத முதலியால் திருப்பணி செய்யப் பட்டது. இங்கேயுள்ள சிற்பங்கள் மிக உயர்ந்த ரகமானவை என்கிறார்கள். இவற்றைக் கடந்து கீழ்க் கோபுரம் வழியாக வெளியே வீதிக்கு வந்துவிடுகிறோம். அங்கேதான் திருமலை நாயக்கர் கட்டிய சத்திரமாகிய புதுமண்டபம் இருக்கிறது. அங்கேயுள்ள சிறு வாவியும் தோட்டமும் அது வசந்த மண்டபமாக உபயோகிக்கப்பட்டதை நினைவுறுத்தும். மண்ட பத்தின் நடுவேயுள்ள தூண்களில் திருமலை நாயக்கர், அவர் முன்னோர் ஆகியோரது உயிர்வடிவ அளவுச் சிலைகள் உள்ளன. குதிரை வீரர், காலாட்கள், புலிவேட்டை ஆகியவற்றைக் குறிக்கும் சிற்பங்கள் களஞ்சியமாகப் பரவிக் கிடக்கின்றன. ஆனால் அவையனைத்தையும் இன்று கடைகள் மூடிக்கொண் டிருக்கின்றன.

மதுரையிலிருந்து தென் கிழக்காக வண்டியூரில் தெப்பக் குளம் இருக்கிறது. இது திருமலை நாயக்கரால் கட்டப்பட்ட நீர்த்தேக்கம். ஒரு கால் வழியாக இதற்கு வைகையிலிருந்து நீர் வரத்து உள்ளது. ஏறக்குறைய குளம் ஒரு சதுரமாக அமைந்திருக்கிறது. குளத்தின் நடுவே ஒரு தீவு இருக்கிறது. தீவில் சோலைகளும் நடுவே ஓர் அழகிய மண்டபமும் இருக் கிறது. தை மாதத்தில் இங்கே சொக்கருக்கும், மீனாக்ஷியம்ம னுக்கும் தெப்ப உற்சவம் சிறப்பாக நடைபெறும்.

திருமலை நாயக்கர் மஹால் பழைய கோட்டையிருந்த இடத்தின் அருகில் பெரும் பகுதி ஜீரணமடைந்த நிலையில் கிடக்கிறது. இதனில் ஒரு பகுதியைப் பிரித்து எடுத்துச் சென்று சொக்கநாத நாயக்கர் திருச்சிராப்பள்ளியில் ஒரு அரண்மனை கட்டினார். பழைய அரண்மனையின் இரண்டு பகுதிகள் இப்போதுள்ளன. அவற்றில் அரசாங்க அலுவல

கங்கள் இருக்கின்றன. இவற்றுள் பெரிய மஹால் 250 அடி நீளமும் 150 அடி அகலமும் உடையது. 40 அடி உயரம் கொண்ட தூண்கள் ஆர்ச் வடிவிலுள்ள கூரையைத் தாங்கி நிற்கின்றன.

கோநெடு மாறன் என்ற பாண்டிய அரசன் காலத்தில் கி.பி. 8ஆம் நூற்றுண்டு பெரியாழ்வார் என்ற விஷ்ணு பக்தர் பிற சமயத்தாரோடு வாதுபுரிந்து திருமாலின் பரத்வ நிருபணம் செய்தாரென்று குரு பரம்பரை வரலாறுகள் கூறு கின்றன. 'கூடல் அழகர்' என்ற பெருமாள் கோயில் மதுரையில் மிகப் பழைமையானது. 'கோழியும் கூடலும் கோயில்கொண்ட கோவலர்' என்று இவரைக் குறையற் பெருமாள் பாடியருளினர். கோயிலின் அஷ்டாங்க விமானத் தில் இரண்டு தளங்கள் உள்ளன. முதல் தளத்தில் பள்ளி கொண்ட மூர்த்தி புஜங்க சயனராய் எழுந்தருளியிருக்கிறுர். அதற்கு மேல்தளத்தில் சூரிய நாராயணமூர்த்தி நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருக்கிறுர். கீழே சந்நிதியில் கூடலழகப் பெருமாள் இருந்த திருக்கோலமாக நாச்சிமார் களோடு எழுந்தருளியிருக்கிறுர்.

கூடலழகர் சந்நிதி பழைமையாகப் பரிபாடல் கூறும் இருந்தையூர் என்பதாகும். மாதரி என்னும் ஆயர் முது மகள், ஆய்ச்சியர் குரவை முடிந்ததும்,

''நீடுநீர் வையை நெடுமாலடி யேத்தத்
தூவித்துறை படியப் போயினுள்.''

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. 'வையை நெடுமால்' என்ப தற்கு விளக்கம் எழுதிய அடியார்க்கு நல்லார், 'ஸ்ரீ இருந்த வளமுடையார்' என்று எழுதியுள்ளார். இருந்த திருக் கோலத் தெம்பெருமா னுனமைபற்றி இவ்வாறு எழுதியுள் ளார் போலும். மதுரையிலே அக்காலத்தில் குறிப்பிடத் தக்க பெருமாள் கோயில் ஒன்றும் இல்லை. இத்திருப்பதியும் வையைக் கரையிலுள்ளது. எனவே மாதரி வழிபட்ட நெடு மால் இக் கூடலழகரேயாகும் எனலாம்.

'' நான் மாடக்கூடலெதிர் கொள்ள வாரு
மருந்தாகும் தீ நீர் மலி துறை மேய

இருந்தையூர் அமர்ந்த செல்வநின்
திருந்தடித் தலையுறப் பரவுதுந் தொழுதே''

என்ற பரிபாடலும் இருந்தையூர் மதுரையைச் சார்ந்ததென்றும், வையைக் கரையில் இருந்ததென்றும் கூறுகிறது. எனவே வையை நெடுமாலே கூடழலகப் பெருமான் ஆவர் எனத் துணிந்து கூறலாம். ஸ்ரீ இருந்த வளமுடையார் கோயில் பரிபாடல் காலத்தில் 'இருந்தையூர்' என வழங்கிற்று போலும். 'அந்தரவானத்தெம் பெருமான்' என்று மேல் தளத்திலுள்ள மூர்த்தியை அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டுள்ளார். சந்நிதியில் சுற்றுப் பிராகாரத்தில் வேலைப்பாடுடை காற்று வாரிகள் உள்ளன. நவக்கிரகப் பிரதிஷ்டை விஷ்ணுவாலயத்தில் இங்கே யுள்ளது புதுமையாயுள்ளது.

மதுரையைச் சுற்றிப் பசுமலை, யானைமலை, பன்றிமலை, நாகமலை, இடபமலை, இலத்திமலை முதலியன உள்ளன. சமணர்கள் யாகம் செய்து அதனின்றும் தோன்றிய பசு, யானை, பன்றி, நாகம் முதலியவற்றைச் சிவபெருமான்மீது ஏவினரென்றும் அவை சிவபெருமானால் சபிக்கப் பெற்று மலையாய் ஆங்காங்கே தங்கிவிட்டனவென்றும் புராணங்கள் கூறும். எவ்வாறாயினும் இவை சமணர் வாழ்ந்த மலைக் குகைகளாகத் தெரிய வருகின்றன.

மீனாக்ஷியம்மை கோயிலிலுள்ள 'பொற்றாமரை வாவி' புலவர் திறனை அளக்குங்கோலாக விளங்கியது. அதிலுள்ள சங்கப்பலகையில்தான் புலவர்களின் நூல்களின் தேற்றம் அறியப்பட்டது. நக்கீரனைச் சிவபெருமான் கரையேற்றிய திருவிளையாடல் இப் பொய்கையில்தான் நடந்தது. சுந்தர பாண்டியன் காஞ்சனைமாலைக்காக வருவித்த ஏழு கடல்களும் நிறைந்த தடாகம் மதுரைக்குத் தென்கிழக்காக உள்ளது. வையை நதி குண்டோதரனுக்கு நீரளிக்கச் சிவபெருமானால் முடிச்சடையிலிருந்து தோற்றுவிக்கப்பட்டது.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்க வாசகர் பொருட்டுத் திருவால வாயுடையார் பல திருவிளை யாடல்கள் புரிந்தார்.

''நரியைப் பரியாக்கி
ஞாலமெல்லாம் நிகழ்வித்து
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்சத்தெற்றி''...........

திருவிளையாடல் புரிந்தார் சொக்கர். அரிமர்த்தன பாண்டியனுக்கு அமைச்சராயிருந்த மாணிக்கவாசகர்,

''ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி''

என்று ஆலவாயனைப் பாடிப் புகழ்வர். திருநீலகண்ட யாழ்ப்பாணரின் பாடலில் உருகி அவரை ஆலயத்துக்கு அழைத்துப் பொற்பலகைமீது நின்று பாடச் சொன்னராம் பாட்டுக் குருகுந் தமிழ்ச் சொக்கர்.

---



திருக்குடந்தை சாரங்கபாணி கோயில்

# திருக்குடந்தை

திருக்குடந்தை என்ற அழகான தமிழ்ப் பெயர் கும்ப கோணம் என்று மொழிபெயர்க்கப்பட்டு ஆங்கில அக ராதியில் இடம்பெற்றுவிட்டது. இவ் ஊரின் பழம் பெயர் குடமூக்கு என்பது. ஊர் குடத்தின் மூக்கைப்போல் அமைந் திருப்பதால் இப் பெயர் பெற்றதென்பர்.

"படமூக்கின் ஆயிரவாய்ப் பாம்பணை மேல் சேர்ந்தாய்
குடமூக்குக் கோயிலாக் கொண்டு"

என்று இத் தலத்தைக் குறிக்கிறுர் பூதத்தாழ்வார். இந்த ஆழ்வாரின் காலம் ஏறக்குறைய கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு எனலாம். எனவே இவ் வூர் மிகப் பழைமையானது. பிரம தேவர் தமது சிருஷ்டித் தொழிலுக்குக் காரணமாயிருந்த மாயக் குடமொன்றை மகாமேருபர்வதத்தில் வைத் திருந்தார். பிரளய காலத்தில் அக் குடம் மிதந்து வந்து இத் தலத்தின் மேல் புறத்தில் தங்கியது. சிவபெருமான் வேட வடிவங்கொண்டு இக் குடத்தை அம்பெய்திச் சேதித்தார். அதனின்றும் உலகம் தோன்றியது. இக் குடத்தினின்றும் அமுதம் பெருக்கெடுத்தோடியது. சிவ பெருமான் உடைந்த குடத்துண்டுகளையும் சிந்திய அமு தத்தையும் சேர்த்துச் சிவலிங்கமாக ஸ்தாபித்துத் தாமே அதற்குப் பூசை செய்தார். அந்த லிங்கத்திற்குக் கும்பேசர் என்ற பெயர் அதன் பயனுய் உண்டாயிற்று. ஊரும் கும்ப கோணம் என்று பெயர் பெற்றது என்கிறது புராணம்.

கும்பேசுவரருக்குத் தங்கக் கவசம் சாத்தியே அபிஷேகம் செய்யப்படுகிறது. அம்பாள் பெயர் மந்திர பீடேஸ்வரி. மங்களாம்பிகை என்ற சாதாரணப் பெயரும் உண்டு. அம்பாள் சந்நிதிக் கருகில் உள்ள வேடவடிவங் கொண்ட சிவபெருமானது மூர்த்திக்குப் பூசை முதலியன நடைபெறு கிறது. கும்பேசர் சந்நிதி த்வஜஸ்தம்பத்திற் கருகில் உள்ள

லக்ஷ்மி நாராயணப் பெருமாளுக்கும் தனிச் சந்நிதி யிருக்கிறது. நாயன்மார்கள் இத் தலத்தைப் பாடியிருக்கின்றார்கள்.

மஹாமகக் குளம் கும்பகோணத்தின் நடுவில் இருபது ஏகரா நிலத்தை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறது. இதன் நான்கு பக்கங்களிலும் பதினாறு சிவ சந்நிதிகள் இருக்கின்றன. இக் குளத்தைத் திருப்பணி செய்த கோவிந்தப்ப தீக்ஷதர் தஞ்சையை ஆண்ட அச்சுதப்ப ராயனுடைய மந்திரியாயிருந்தார். இக் குளத்தின் மத்தியில் ஒன்பது கிணறுகள் இருக்கின்றன. நவதீர்த்தங்களாகிய கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நர்மதை, காவேரி, சிந்து, கன்யா, தப்தி ஆகிய தீர்த்தங்களே இவ் வொன்பது கிணறுகளாக இருக்கின்றன என்பர். ஆண்டு தோறும் மாசி மாதம் மக நட்சத்திர தினம் ஸ்நானத்திற்கு மிகப் புனிதமானதாகக் கருதப்படுகிறது. மகாமகப் புண்ணிய காலம் பன்னிரண்டாண்டிற் கொருமுறை வரும். குரு சிம்மராசியில் இருக்கும் காலத்தில்தான் இப் புண்ணிய தினம் கூடும். அந்தத் தினத்தன்று இங்கே நீராடினால் மேற்சொன்ன ஒன்பது தீர்த்தங்களில் குளித்த பலன் கிடைக்கும். நவ தீர்த்தங்களும் நவ கன்னிகைகளாக ஸ்ரீகாசி விஸ்வநாத ஸ்வாமி சந்நிதியில் எழுந்தருளி யிருக்கிறார்கள்.

ஒன்பதாம் நூற்றாண்டில் அரிசிலாற்றங் கரைக்குப் பக்கத்தில் மாதளம் என்ற இடத்தில் பாண்டிய மன்னன் ஸ்ரீமாறனுக்கும் சோழனுக்கும் போர் நடந்தது. சோழனுக்குப் படைத்துணை புரிந்தவர்கள் கங்கர்கள். ஆனால் சோழன் தோற்றான். இப்பொழுது சோழன் மாளிகை என்று வழங்குமிடத்தில் சோழர்களரண்மனை யிருந்ததென்கிறார்கள். பூமியில் அவ் விடத்தில் கிடைத்த பெருங் கற்கள் இதற்குச் சாட்சி பகர்வனவாயுள்ளன. அதனருகே யிருந்த தங்கசாலைத் தெரு இப்பொழுது நாணயக்காரன் தெரு என்று வழங்குகிறது. திருவழுந்துறை யென்னுமிடத்தில் புத்தர் கோயில் இருந்ததென்றும் அது பிற்காலத்தில் அழிந்துவிட்டதென்றும் தெரிகிறது. திருநாகேச்சுரம், திருவலஞ்சுழி முதலிய இடங்களிலும் பௌத்தச் சிலைகள் காணப்படுவது இங்குப் பௌத்த மதம் சிறப்புற்

றிருந்ததை உறுதிப்படுத்தும். நாகேஸ்வர ஸ்வாமி கோயி லிலும் பௌத்தச் சிலைகள் காணப்படுகின்றன. பௌத்தக் கோயில்களைச் சைவம் ஆக்ரமித்துக் கொண்டதை இவை தெளிவு படுத்தும்.

விஜயநகர மன்னர் ஸ்ரீ கிருஷ்ணதேவ ராயர் இங்கு விஜயம் செய்த காலத்தில் (1517) மகாமகப் புண்ணிய காலமும் உடன் நேரவே அவர் இங்கே ஸ்நானம் செய்து பல தருமங்கள் செய்தாரென்று நாகலாபுரம் கல்வெட்டு கூறுகிறது.

வைணவர்களுக்குக் குடந்தை ஒரு முக்கியத் தலமாக விளங்குகிறது. திவ்யப் பிரபந்தங்கள் நமக்குக் கிடைப்ப தற்குக் காரணமாயிருந்த ஊர் திருக்குடந்தையேயாகும். ஸ்ரீமந் நாதமுனிகள் சாரங்கபாணி சந்நிதிக்கு எழுந்தருளி யிருந்த காலத்தில் 'குருகூர்ச் சடகோபன் குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும்' என்று சில பாகவதர்கள் பாடக் கேட்டார். ஓராயிரமும் அவர்களுக்குப் பாடமோ என்று வினவியபோது குடந்தைப் பதிகம்தான் அவர் களுக்குப் பாடமாகு மென்றறிந்து ஆழ்வார் திருநகரிக்குச் சென்று ஸ்ரீகோசங்களைக் கொணர்ந்தார் என்று குரு பரம்பரை வரலாறுகள் கூறுகின்றன. எனவே, லுப்தமா யிருந்த பிரபந்தங்களை வெளியிடக் காரணமா யிருந்த ஆருவமுதப் பெருமானுக்கு ஆருவமுதாழ்வானென்று வைணவர்கள் பெயர் வழங்கினர்.

திருமழிசை யாழ்வார் நெடுங்காலம் திருக்குடந்தையில் வாசஞ் செய்து தமது ஜீவயாத்திரையையும் அங்கே முடித்துக் கொண்டாரென்பர். 'திருமழிசைப் பிரான் உகந்த இடம்' என்றே இத் தலத்தை வைணவர் போற்றுகிறார்கள். 'குடமூக் கிற் பகவர்' என்ற இவரைத் தமிழிலக்கியங்கள் போற்று கின்றன.

சாரங்கபாணி கோயில் கோபுரம் தென்னிந்தியாவி லுள்ள மிகப் பெரிய கோபுரங்களிலொன்று. பெருமாள் சந் நிதியும் முன் மண்டபங்களும் ரதம்போல் அமைக்கப்பட்டிருக் கின்றன. மண்டபத்தின் நான்கு புறங்களில் சக்கரங்களும் அவற்றைக் குதிரைகள் இழுத்துச் செல்வதுபோலும் அமைக்

கப்பட்டிருக்கின்றன. இப் பெருமாள்மீது திருமங்கை மன்னன் 'திருவெழுக் கூற்றிருக்கை' என்ற ரதபந்தத் தனிப் பிரபந்தம் பாடியிருக்கிறார். ஏழு ஆழ்வார்கள் இத் தலத்தை மங்களா சாஸனம் செய்திருக்கிறார்கள். ஹேமரிஷியின் தவத்திற் கிணங்கித் திருமால் கையில் சாரங்கமேந்தி இங்கே எழுந்தருளினாரென்பது வரலாறு. கோயிலின் பின்புறமுள்ள ஹேமபுஷ்கரணி தீர்த்தக் கரையில் முனிவருக்குச் சிறிய சந்நிதியிருக்கிறது.

'' கடந்தகால் பரந்த காவிரிக்
கரை குடந்தையுள்
கிடந்தவா றெழுந்திருந்து
பேசுவாழி கேசனே ''

என்று திருமழிசை பிரான் ஆஞ்ஞாபிக்கப் பெருமாள் சற்றே படுக்கையினின்றும் எழுந்திருக்கும் கோலமாகக் காட்சியளிக்கிறார். இதை உத்தான சயனம் என்பர். ஆழ்வார் சொல்லிய வண்ணம் பெருமாள் அடியானைப்போல் செய்ததால் பெருமாளுக்கு ஆராவமுதாழ்வாரென்றும் ஏவிய ஆழ்வாருக்குத் திருமழிசைப் பிரானென்றும் பெயர் வழங்கலாயிற்று.

நம்மாழ்வார் திருகுடந்தைக்கு எழுந்தருளியிருந்தார். வழியிலுள்ள இயற்கைக் காட்சிகள் அவர் மனத்தை ஈர்த்தன. வழியில் ஓடையிலே இருந்த தாமரைகளெல்லாம் மலர்ந்திருந்தன. ஆனால் அவ் வெம்பெருமானுடைய தாமரைக் கண்கள் மாத்திரம் தம்மை நோக்கி மலரவில்லையே என்று அவர் வருந்துகிறார்.

'' செம்மா கமலம் செழுநீர் மிசைக்
கண்மலரும் திருக்குடந்தை
அம்மா மலர்க்கண் வளர்கின்றானே
என்நான் செய்கேனே.''

இறைவனுடைய தாமரைக் கண்கள் அலர்ந்தால் அத் தேனை நுகர்வதற்கு ஆழ்வாராகிய வண்டு அவாவுறுகிறது. காற்றிலசைந்தாடும் நெற்பயிர்கள் இறைவனுக்குச் சாமரை வீசுவதுபோல் அவருக்குக் காண்கிறது. 'செந்நெல் கவரி வீசும் செழுநீர் திருக்குடந்தை' என்று பாடுகிறார் ஆழ்வார்.

'என் நான் செய்கேன்?' 'யாரே களைகண்?' 'களைகண் மற்றிலேன்' என்றெல்லாம் ஆர்த்தி தோன்றப் பாடுகிறார்.

கீழைக் கோட்டம் என்ற நாகஸ்வாமி கோயில் மகா மகக் குளத்தருகே இருக்கிறது. விசுவகர்மன் சாபத்தால் சூரியன் ஒளியிழந்து நாகேஸ்வர சுவாமியைப் பூசித்துத் திரும்ப ஒளி பெற்றான் என்பது புராணக் கதை. இதற்கேற்ப, சூரிய ஒளி நாகேஸ்வர ஸ்வாமிமீது வருடந்தோறும் சித்திரை மாதத்தில் 11, 12, 13 தேதிகளில் விழுகின்றதென்கின்றார்கள். நாகலோகத்திலிருந்து வந்து நாகராஜன் பூசித்து வந்ததால் இறைவனுக்கு அப் பெயர் உண்டாயிற்றென்கிறார்கள்.

இராமஸ்வாமி கோயிலில் ராமபிரான், சீதா, லஷ்மண, பரத, சத்ருக்ன, ஆஞ்சநேயர்களுடன் பட்டாபிஷேகக் கோலமாக எழுந்தருளியிருக்கிறார். இந்த விக்ரகங்கள் தாராசுரத்தில் புதையுண்டு கிடந்தனவென்கிறார்கள். தஞ்சை மன்னன் ரகுநாத நாயக்கன் கனவில் கடவுள் தோன்றி அந்தச் சிலைகளை இங்கே பிரதிஷ்டிக்குமாறு கூறினாரென்றும் அரசன் அவ்வாறே திருப்பணி செய்தானென்றும் கூறப்படுகிறது.

ஸ்ரீ ராமஸ்வாமி கோயிலின் மஹா மண்டபத்தில் உள்ள பிரம்மாண்டமான தூண்களின் நான்குப்புறங்களிலும் பல அற்புதமான காட்சிகளைக் காணலாம். அவைகள் வடிவில் சிறியவையானாலும் நுணுக்கமான வேலைப்பாடோடமைந்தவை. ராமபிரான், சீதாப் பிராட்டி ஆகியோரது உருவங்களின் முகக்குறிகள் நம்மை மயக்குறச் செய்கின்றன. இந்தக் கோயிலின் உட் சுவர்களில் 220 சித்திரங்களில் ராமாயணக் கதை முழுவதும் காட்டி யிருக்கிறார்கள். இவை விஜயநகர அரசர் காலத்தவை என்கிறார்கள். இவற்றைச் சமீப காலத்தில் புதுப்பித்திருக்கிறார்கள். ரகுநாத நாயக்கன் சிலையும் தூணில் காணப்படுகிறது.

சக்ரபாணி கோயில் காவிரியின் தென்கரையில் இருக்கிறது. இக் கோயில் மாடக் கோயில் போலுள்ளது. ஒரு சிறிய மலைமேல் சந்நிதி யிருக்கிறது. சக்ராயுதத்திற்குள் ஸ்வாமி யெழுந்தருளி யிருக்கிறார். உற்சவ விக்ரகம் மிகுந்த உக்கிரமாக இருக்கிறது. சூரியன் முதலானோர்க்கும் விக்ரகங்கள் இருக்கின்றன. கும்பகோணத்தில் ஆதி சங்கரா

சாரியாரால் ஸ்தாபிக்கப்பட்ட காமகோடி பீட மடம் இருக்கிறது.

கும்பகோணத்தை அடுத்த தாராசுரம் ஐராவதேஸ்வர ஸ்வாமி கோயில் சிறப்பக் களஞ்சியமாய் விளங்குகின்றது. இதை ராஜராஜ சோழன் கட்டிச் 'சிவபாத சேகரன்' என்ற பெயர் சூட்டிக்கொண்டான். சுவாமிக்குப் பெயர் ராஜ ராஜேஸ்வர முடையான் என்பது. இத் தலத்திற்கு ருத்ராக்ஷ வனமென்ற பெயரும் உண்டு. கோயிலில் எங்குப் பார்த்தாலும் கொடிகளாலும், பூக்களாலும், சிறு உருவங்களாலும் சிற்பத்தை நிறைத்து விட்டிருக்கிறுர்கள்.

ஐராவதேஸ்வராலயத்தின் தெற்குப் பாகத்தில் சரப மூர்த்தியின் சிலே யொன்றிருக்கிறது. துஷ்டநிக்ரக சிஷ்ட பரிபாலனுர்த்தம் இரணியனே நரசிம்மமூர்த்தி வதஞ்செய்து முடிந்ததும் சிவபெருமான் சரபத்தில் வந்து சக்தியை ஆகர்ஷித்துக்கொள்ளும் காட்சி வெகு தத்ரூபமாகக் காட்டப்பட்டிருக்கிறது. ருத்ரரூபம் சிங்க முகத்தோடு மூன்று கண்கள், எட்டுக் கால்கள், இரண்டு இறக்கைகளோடு சீறும் அழகுடன் விளங்குகிறது.

அலங்கார மண்டபத்தில் உள்ள சௌபாக்கிய புவனேஸ்வரியின் சிலே மண்டபத்திற்கே ஒரு சோபை யளிக்கிறது. அம்மனது உடல் நெளிவு, அங்க லட்சணங்கள், ஆபரணங்கள் ஆகியவற்றைக் காண்போர் தெய்வ அருள் சுழல்வதை அங்கே காணலாம். மண்டபத்தில் பலிபீடத்திற்கு முன்னுல் சந்நிதியை நோக்கி நந்திகேஸ்வரர் கம்பீரமாக அமர்ந்திருக்கிறுர்.

ஐராவதேஸ்வரர் கோயிலின் வடக்குப் பிராகாரத்தில் அறுபத்துமூவர் சந்நிதிக்கருகில் ரதி மன்மதர்கள் அந்யோன்ய தம்பதிகளாக ரதத்தின்மீது ஆரோகணித்திருக்கும் காட்சி கண்களேப் பறித்து நிற்கிறது. ரதத்தின் குதிரை, சக்கரம் ஆகியவை மிகுந்த வேலேப்பாடோடு விளங்குகின்றன.

முன்னெரு காலத்தில், ஐராவதம் என்ற தேவேந்திரனுடைய யானே தன் வெண்ணிறத்தை இழந்துவிட்டது. பிறகு இத் தலத்தில் சிவபெருமானேப் பூசித்து மீண்டும் தன்

ஒளி பெற்றது. ஐராவதத்தின்மேல் அமர்ந்திருக்கும் தேவேந்திரனது சிலை ஒன்று கோயிலில் இருப்பது இந் நிகழ்ச்சியைக் குறிப்பதாயுள்ளது.

அலங்கார மண்டபத் தூண்களைக் கீழேயிருந்து நிமிர்ந்து பார்த்தால் சிற்ப வேலைகள் ஓர் இழைகூட விடாமல் செய்யப் பட்டிருப்பதைக் காணலாம். களிமண்ணாலும் செய்ய வியலாத சித்திரங்கள் இங்கே கல்லில் இழைக்கப்பட்டிருக் கின்றன. ஆலயத்திலுள்ள பலிபீடத்தின் கற்களைத் தட்டினால் சங்கீத சாஸ்திரத்திற்கமைய சப்தஸ்வரங்கள் கேட்கின்றன. யமதர்மராஜனுக்கு இங்கே ஒரு சந்நிதியும் இருக்கிறது.

பழையாறு என்ற ஊர் கும்பகோணத்துக்கு அருகே முடி கொண்டான், அரிசிலாறு என்ற இரண்டு நதிகளுக்கிடையே 15 சதுர மைல் பரப்பு பூமியை அடக்கிக்கொண்டிருக்கிறது.

'' தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரில் நீடிய பெருமை சேர்பதி பழையாறை ''

என்று இப் பதியைச் சேக்கிழார் போற்றுகிறார். பழையாறு, மூலையூர், பட்டீஸ்வரம், சத்திமுற்றம், திருமட்டடி, சோழ மாளிகை, அரியப்படையூர், பம்பைப்படையூர், புதுப் படையூர், மணப்படையூர், சுந்தரப்பெருமாள் கோயில், தாராசுரம், நாதன் கோயில் முதலிய ஊர்கள் இதில் அடங்கி யிருந்தன. மூலையூரில்தான் வட தளி மாடக்கோயில் இருக்கிறது. கோச் செங்கட் சோழனால் திருப்பணி செய்யப் பட்ட சிவாலயங்களில் இதுவும் ஒன்றென்கிறார்கள். மூலை என்ற சொல் பௌத்தருடைய பள்ளிகளைக் குறிக்கின்றது. ஆதியில் பௌத்தர்கள் பழையாறையில் குடிகொண்டிருந் தார்கள் என்றும் சோழ அரசர்கள் அவர்களோடு நல்லுற வுடன் இருந்தார்களென்றும் சிலாசாஸனங்கள் கூறுகின்றன.

'' தாழி யோங்கு மலர்க் கண்ணவர் தண்ணடி
பாழி யோங்கு புனலார் பழையாற்றுள்
காழி நின்ற மதியான் மதி சேர்ந்து
வாழி யென்று வணங்க வினைவாரா ''

என்ற யாப்பருங்கல விருத்திப் பாடல் இதனை வலியுறுத்தும்.

புகாரைக் கடல் கொண்ட பிறகு சோழர்கள் பழையாறையே தங்கள் படைத் தளமாகக் கொண்டார்கள் எனலாம்.

"ஆதியைப் பழையாறை வடதளிச்
சோதியைத் தொழுவார் துயர் தீருமே"

என்று அப்பர் சுவாமிகளும்,

"மாலே மண நாறு பழையாறை
மழபாடி யழகாய மலிசீர்"

என்று ஞானசம்பந்தரும் இத் தலத்தைப் பாடியுள்ளனர். இந்தக் கோயில் மண்ணுல் மூடப்பட்டிருந்ததாகவும் இதை அப்பர் சுவாமிகள் சோழ மன்னன் உதவியால் புதுப்பித்த தாகவும் கூறப்படுகிறது. ராஜேந்திர சோழன் காலத்தில் சோழன் மாளிகை என்ற இடத்தில் அவன் அரண்மனே இருந்தது.

இன்று பழையாறு ஆலயம் புதர்கள் மண்டி, இடிந்த சிதிலமான நிலேயில் இருக்கிறது. மதிள்கள் இடிந்து கிடக்கின்றன. சோமநாதஸ்வாமி சந்நிதி மண்டபம் ஒரு ரதமாகி, அதற்கு அற்புதமான வேலேப்பாடுகளமைந்த சக்கரங்களே அமைத்து உடல் முழுவதும் அலங்கரிக்கப் பெற்ற யானேயும், குதிரையும் அதைப் பலம் கொண்டு இழுப்பதுபோல் செய்திருக்கிருர்கள். மண்டபத்தின் அடிப்பக்கத்தில் சிறுசிறு நடனச் சிற்பங்கள் காணப்படுகின்றன. ஆலயத்திலுள்ள ஜ்வாலமுக வைஷ்ணவீ, கைலாசபதி ஆகியோர் சிலேகள் வெகு கவனத்துடன் பிழையில்லாமல் பேராற்றலுடன் செய்யப்பட்டிருக்கின்றன.

ஆலயத்தின் முன்கோபுரத்தைத் தாண்டியதும் சோமலாம்பிகை அம்மை சந்நிதி யிருக்கிறது. படிக்கட்டுகளின் இருபுறங்களிலும் துவார பாலகர் சந்நிதி இருக்கிறது. இவற்றின் நடுவேதான் பக்த பிரகலாதனுக்காகக் கம்பத்தில் தோன்றிய நரசிம்மமூர்த்தியின் கதையை அருமையான சிற்ப மூலமாகக் காட்டி யிருக்கிருர்கள். இரணியப் பிரகலாத சம்வாதம், நரசிம்மமூர்த்தி தூணினின்றும் வெளிப்படுதல், இரணிய நரசிம்ம யுத்தம், இரணிய வதம் ஆகியவற்றை

உத்வேகத்துக்கும் ஆச்சர்ய பயங்கரத்துக்கும் எடுத்துக் காட்டாக நேரில் காண்பதுபோல் உருவாக்கி இருக்கிறுன் சிற்பி.

மனிதன் சிங்கத்தோடு சண்டை செய்யும் சிலைகள் மாத்திரம் இங்கே இருபதுக்கு மேல் உள்ளன. சிங்கம் நெருப்பு மூச்சு விடுவது போலவும், நெருங்கினுல் பாதத்தால் அறைந்து விடும் என்று அச்சம் தோன்றும் வண்ணமும் கம்பீரமாக வாலைச் சுருட்டி இரு முன்னங்கால்களை மேலே தூக்கி நிற்கின்றது. மேலே ஏறியிருக்கும் வீரனையும் கீழே தள்ளி அறையப் பார்க்கிறது சிங்கம். உயிர் ஒன்றுதான் இல்லை, அசல் சிங்கம்தான். கால் நகங்களை வெகு அழகாக உருவாக்கியிருக்கிறுன் சிற்பி.

பட்டீஸ்வரம் கும்பகோணத்திற்குத் தென்மேற்கில் நான்கு மைலில் இருக்கிறது. காமதேனுவின் புதல்வி பட்டி பூஜை செய்த தலமாதலால் பட்டீஸ்வரம் எனப் பெயர் பெற்றது இத் தலம். அச்சுத நாயக்கரின் மந்திரியாகிய கோவிந்த தீட்சிதர் தன்னிறுதிக் காலத்தை இங்கேதான் கழித்தாரென்கிறுர்கள். அவருடைய சிலையும் அவர் மனைவி சிலையும் இங்கே அவர்கள் ஆலயத்தில் செய்த திருப்பணியை நினைவூட்டுவனவா யுள்ளன. வடக்குக் கோபுர வாசலில் வடக்கு நோக்கி விஷ்ணு துர்க்கை தனிக் கோயிலி லிருக்கிறுள்.

தேனுபுரீஸ்வர ஸ்வாமி சந்நிதியில் உமாதேவி சிவபெருமானைக் குறித்து ஒற்றைக்காலால் நின்று தவஞ் செய்யும் கோலத்தில் நிற்கிறுள். இடக்காலை வெகு அழகாய் மடித்து உள்ளங்கால் உயர நோக்கும் வண்ணம் நிற்கிறுள் அம்மை. இந்த அம்மையார் தவம் செய்வதால் எதிரே ஒரு கிணறும் பலிபீடமும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஞானசம்பந்த ஸ்வாமிகள் சத்தி முற்றத்திலிருந்து பட்டீஸ்வரம் எழுந்தருளினுர். அப்போது சிவபெருமான் ஏவலால் பூதகணங்கள் முத்துப் பந்தல் எடுத்துச் சென்று அவருக்குக் குடைபோல் பிடித்து வரவேற்றன. தலத்தை அணுகியபோது நந்தி விலகி வழி செய்தது.

இத் தலப் பெருமான் ஆநிரைகளைக் காத்தார் எனக் கூறப்படுகிறது. ராவணனைக் கொன்ற பாவம் தீர ராமபிரான் இங்கே சிவபெருமானை வழிபட்டார் என்கிறுர்கள்.

ஸ்ரீராமர் படம் இங்கே பூஜையிலிருக்கிறது. ராமர் தமது கோதண்டத்தால் உண்டாக்கிய தனுஷ்கோடி தீர்த்தம் சந்நிதியில் இருக்கிறது. இதில் குளிப்பதால் நலங்கள் விளையு மென்பர்.

திருவலஞ்சுழி என்ற மற்ெருரு தலம் கும்பகோணத்துக்கு மேற்கில் ஐந்து மைல் தூரத்தில் இருக்கிறது. காவிரி நதி இப் பிரதேசத்தை அணுகியபோது மூர்த்தியின் விசேஷத்தை யொட்டி வலமாகச் சென்ற காரணத்தால் இத் தலம் திரு வலஞ்சுழி என்று பெயர் பெற்றது. இவ்விடத்தில் நதி பாதா ளத்தில் அழுந்தி மறைந்துவிட்டது. ஹேரண்ட முனிவர் என்பவர் கொட்டையூரில் தவம் செய்து வந்தார். அவர் தம்மையே தியாகம் செய்து கொண்டதால் நதி மேலெழுந் தது. காவிரி மேலே கொண்டு வரப்பட்ட இடம் இன்று மேலைக் காவிரி என்று வழங்கப்படுகிறது. ஹேரண்ட மக ரிஷிக்குக் கோயிலில் ஒரு சந்நிதி யிருக்கிறது.

இவ் வாலயம் விஸ்வகர்மாவினுலேயே திருப்பணி செய் யப்பட்டது என்பர். அமிர்தம் கடைந்த காலத்தில் விநாயக ருடைய தயவில்லாமல் காரியத்தை ஆரம்பித்ததால் கடு விஷம் தோன்றிற்று. பிராயச்சித்தமாகத் தேவர்கள் கடல் நுரையில் ஒரு விநாயகரை உருவாக்கிப் பூஜை செய்தார்கள். அந்த விநாயகமூர்த்தியை இந்திரன் பூஜை செய்து வந்தான். தலயாத்திரை செய்து கொண்டு வந்தபோது திருவலஞ் சுழியில் வைத்த விக்ரகத்தை அவனுல் எடுக்க முடியவில்லை. அவ் விக்ரகத்தை அங்கேயே எழுந்தருள வைத்துவிட்டு விநாயக சதுர்த்தி யன்று வந்து பூஜை செய்யும்படி அசரீரி கூறிற்று. அதன்படியே இந்திரனும் மேலுலகம் சென்றுவிட் டான். பூஜைக்கு ஆண்டுதோறும் விநாயக சதுர்த்தி யன்று வருவதாக ஐதீகம். இந்தப் பிள்ளையார் முதல் பிராகாரத் திலே வில்வ மரத்தடியில் இருக்கிருர். வெள்ளை வெளேரென் றிருப்பதால் அவருக்குச் 'சுவேத விநாயகர்' என்று பெயர் உண்டாயிற்று. வாயின் வழியில் விசித்திரமான வேலைகள் செய்யப்பட்ட பலகணிகளைக் காணலாம். கல்லால் இவை வெகு திறமையுடன் செய்யப் பட்டவை. இந்திர சம்பந்தத் தால் இங்கே நிறைய அப்ஸர ஸ்திரீகளின் சிலைகள் இருக்

கின்றன. அவற்றில் மிகச் சிறந்த ஒன்று நாட்டியக் கோலத்தில் இருக்கிறது. ஆனால் பின்னமடைந்து விளங்குகிறது. திருவலஞ்சுழியிலுள்ள பல சிற்பச் சின்னங்கள் அழிந்து நிலை குலைந்திருக்கின்றன.

திருவலஞ்சுழிக்கு வெகு அருகில் காவிரியின் வடகரையில் சுவாமிமலை என்ற சுப்ரமணியத் தலம் இருக்கிறது. இத் தலம் முருகனது ஆறுபடை வீடுகளில் ஒன்றாகக் கருதப்படுவது; நக்கீரர் பாடல் பெற்றது; மிகப் பழைமையானது.

> '' தரு காவிரிக்கு வடபாரிசத்தில்
> சமர் வேலெடுத்த பெருமாளே !

என்று இத் தலத்தைப் பாடுகிறார் அருணகிரியார். கோயில் ஒரு கட்டு மலைமேலிருக்கிறது. முருகனின் பெயர் சாமிநாதன் என்பது. தகப்பனுக்குப் பிரணவத்தைப் போதித்ததால் இப் பெயர் வந்தது என்பர். இதை யொட்டி முருகன் கோயில் மேலும், சிவபெருமான் கோயில் கீழுமாக அமைந்திருக்க வேண்டும்.

இந்திரனுக்கு ஏற்பட்ட சாபம் இங்கே தொலைந்ததென்று அவன் தன் யானையை இங்கேயே விட்டுச் சென்றதாகவும் கூறுவர். இதனால்தான் முருகனுக்கு முன்னால் மயிலுக்குப் பதில் யானை இருக்கிறது போலும். ருதுக்கள் இங்கே காவல் தெய்வமாய் இருக்கிறார்கள். அறுபது வருடங்களும் அறுபது படிகளாக இங்கே தவங் கிடக்கின்றன என்கிறார்கள்.

திருவேரகம் என்று இத் தலத்தை நக்கீரர் பாடி யுள்ளார். நக்கீரர் திருவேரகத்தை அந்தணர்கள் வழிபடுவதற்குரிய இடமாக விளங்குகிறதாகக் கூறுகிறார். இவ் வந்தணர்களுடைய இயல்பைக் கூறி அவர்கள் முருகனை வேதத்தாலும், பிற தோத்திரங்களாலும் வழி படுவதாகக் கூறுகிறார் நக்கீரர்.

அந்தணர்கள் நீராடி, ஈர உடை உடுத்தி, சிரத்தின்மேல் கூப்பிய கையை யுடையவர்களாய்த் தாங்கள் உபதேசம் பெற்ற ஷடாக்ஷர மந்திரத்தை உரக்கச் சொல்லாமல் நா அசை அளவில் பலமுறை கூறி, வாசனை மிக்க மலர்களை

எடுத்து வழிபடுகிறார்கள். இந்த வழிபாட்டை மகிழ்வோடு ஏற்றுக் கொள்ளுகிறான் ஏரகத் திறைவன்.

"புலராக் காழகம் புலர உடீஇ
உச்சி கூப்பிய கையினர் தற் புகழ்ந்து
ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏத்திப் பெரிது உவந்து
ஏரகத் துறை......"

என்று நக்கீரர் பாடுகிறார்.

"......காவிரியாற்றுக்குளே வரு
வளமைச் சோழ நன்னாட்டுக்குள் ஏரக
நகரிற் சீர் பெறு மோட்சத்தை யேதரு பெருமாளே."

என்று திருப்புக ழாசிரியர் பாடுகிறார்.

அந்த ஆலயம் சமீப காலத்தில் திருப்பணி செய்யப் பட்டது. பின் பிராகாரத்திலுள்ள கஜலட்சுமி, சரஸ்வதி முதலியோரது சிலா விக்ரகங்கள் சமீப காலத்தவையானு லும் மிகச் சிறந்தவையாக உள்ளன.

நாதன் கோயில் என்பது கும்பகோணத்திற்குத் தெற்கே ஐந்து மைலில் பழையாறைப் பகுதியைச் சேர்ந்த ஒரு விஷ்ணு ஸ்தலம். இப் பெருமானை எட்டாம் நூற்றாண்டவராகிய திருமங்கை மன்னன் பாடி யிருக்கிறார். பழையாறை வட தளியைப்போல் இதுவும் மிகப் பழைமையான கோயிலே. சோழர் காலத்தில் மிகுந்த புகழ் பெற்றிருந்தது இவ் வூர். பல்லவ வேந்தனாகிய இரண்டாவது நந்திவர்மன் சோழ நாட்டைக் கைப்பற்றிப் பழையாறையைத் தனதாக்கிக் கொண்டு இந்த விஷ்ணு ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்தான். இத் தலம் இதன் பொருட்டே 'நந்திபுர விண்ண கரம்' எனப் பெயர் பெற்றதென்பர்.

"தாய் செற ஷளைந்து துயிருண்டு
ஆட ளாடு தடமார்னர், தகைசேர்

நாதனுறை கின்ற நகர்
நந்திபுர விண்ணகர் நண்ணுமனமே!''

என்று திருமங்கையாழ்வார் இத் தலத்தைப் பாடுவர். மற்ருேர் பாசுரத்தில் நந்திவர்மன் செய்த திருப்பணியை மனத்தில் கொண்டு, 'நந்திபணி செய்த நகர் நந்திபுர விண்ணகர நண்ணு மனமே!' எனப் பிறிதோரிடத்தில் பாடுவர்.

நந்திகேசுவரர் இங்கே 'நந்திவனம்' என்னும் இடத்தில் தவம் செய்தா ரென்றும் திருமால் அவருக்குக் காட்சி யளித்தா ரென்றும் கூறப்படுகிறது. பெருமாள் பெயர் நாதன், ஜகந்நாதன், நந்திபுர விண்ணகரப் பெருமாள் என்றெல்லாம் வழங்குகிறது. தாயார் பெயர் சண்பகவல்லி. இங்கே நந்தி தீர்த்தம் இருக்கிறது. பெருமாள் மேற்கு நோக்கி எழுந்தருளியிருக்கிருர். நந்திக்கும், சிபிச் சக்ரவர்த்திக் கும் பிரத்தியட்சமானதாக ஐதீகம். இரண்டாம் நந்திவர்மன் இங்கே ஓர் அரண்மனேயும் கட்டிஞனென்பர். சித்திரமாய னும், சோழப் படையும் இங்கே நந்திவர்மனே முற்றுகை யிட்டனரென்றும், உதயசந்திரன் என்ற பல்லவ சேஞதிபதி அவர்களே முறியடித்து முற்றுகையை நீக்கிஞன் என்றும் கூறப்படுகிறது.

# காஞ்சி

'முத்தி தரு நகரேழில் முக்கியமாம் காஞ்சி', என்று பாரத நாட்டு ஏழு புண்ணியத் தலங்களில் முதன்மையான தாகக் கருதப்பட்டது காஞ்சி. 'காசி முதலான நன்னகரி லெல்லாம் கார்மேனி யருளாளர் கச்சிக்கு ஒவ்வா' என்று வேதாந்த தேசிகர் கூறுகிறார்.

காஞ்சியிலே காக்கை யொன்றுதான் கருநிறம் படைத் தது என்று பொருள்பட, 'தொண்டைமான் கச்சியுள் காக்கை கரிது' என்று கூறுகிறார் பொய்கையார் என்னும் சங்கப் புலவர். காஞ்சியில் எல்லாப் பொருள்களும் சிறந்து விளங்கின என்பதைக் கூறவந்தவர் புலவர்.

சங்க காலத்திலும் காஞ்சி சிறந்து விளங்கிற்று என்பது பத்துப் பாட்டால் அறியலாம். பெரும்பாணாற்றுப் படையின் ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் காஞ்சியின் பெரு மையையும் அதை ஆண்டுவந்த இளந்திரையனையும் பின்வரு மாறு பாராட்டுகிறார்.

"நீணிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி,
சுடுமண் ஓங்கிய நெடுநகர்—
.......................................................
.......................................................
மலர்தலை உலகத்துள்ளும் பலர்தொழ
விழவு மேம்பட்ட பழவிறன் மூதூர்."

நீல வண்ணமான வடிவினையுடைய திருமாலின் கொப் பூழினிடத்து மலர்ந்துள்ள நான்கு முகங்களையுடைய பிரமனைப் பெற்ற, பல இதழ்களோடு கூடிய தாமரை மலரின் நடுவே உள்ள பொகுட்டினைப்போல (முகை) எல்லோரும் காணும் படி விளங்கிய, செங்கல்லினாலே கட்டப்பட்ட மதிலையுடைய நீண்ட நகர்,...உலகத்துள்ளே பலரும் கை தொழும்படியான



காஞ்சி காமாட்சி அம்மன் கோயில்

திருவிழாக்கள் மலிந்த, தொன்றுதொட்டுப் பெருமை வாய்ந்த பழைமையான ஊராகிய கச்சி' என்று இப்பாட்டுக்கு உரை கண்டுள்ளார் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர். புலவர் காலம் கி. பி. முதல் நூற்றாண்டு என்பர். அவர் காலத்தே காஞ்சியின் புகழ் வெகுதூரம் பரவியிருந்தது.

நெடுங் காலத்திற்குமுன் தொண்டைநாடு 'குறும்பர் நிலம்' என்று பெயர் பெற்றிருந்தது. அக் குறும்பர் ஆடு மாடு மேய்த்துக் காலத்தைக் கழித்தவர். நாட்டை 24 கோட்டங்களாக அவர்கள் பிரித்திருந்தார்கள், ஆதொண்டைச் சக்கரவர்த்தி குறும்பரை வென்று அந் நாட்டுக்குத் தொண்டை மண்டலம் எனப் பெயரிட்டான் என்பர். கரிகாலன் காலத்தில் தொண்டை மண்டலம் சோழருடையதா யிருந்தது. தொண்டைக் கொடியால் சுற்றப் பட்டுக் கடல் வழிவந்த நாகர் மகள் மகனான இளந்திரையன் ஆண்ட இடமாதலால் 'தொண்டைமண்டலம்' எனப் பெயர் பெற்றது என்பர். கரிகாலன் காஞ்சியை மதிள்கள் எழுப்பி அழகு படுத்தினான். வேளாண்குடி மக்களைக் கொணர்ந்து நாட்டைச் செழிப்பாக்கினான்.

மணிமேகலை (கி. பி. 2ஆம் நூற்றாண்டு) காலத்தில் காஞ்சி இளங்கிள்ளி என்பவன் ஆட்சியில் இருந்தது. அவன் புத்தர் கோயில் ஒன்றைக் கட்டினான். மணிமேகலை காஞ்சிக்குச் சென்று புத்த பீடிகையை அமைத்தாள். மணிமேகலா தெய்வத்திற்கும், தீவதிலகைக்கும் கோட்டங்கள் அமைக்கப் பட்டன. மணிமேகலை அறவணடிகளிடத்தில் தவத்திறம் பூண்டு அறம் கேட்டதாகக் கூறப்படுகிறது. 'பவத்திறம் அறுக' என்று அங்கேயே தவங்கிடந்தாகக் கூறப்படுகிறது. மணிமேகலையம்மன் கோயிலொன்றும் காஞ்சியில் இருந்ததாகக் கூறப்படுகிறது.

சாத்தனார் (மணிமேகலை ஆசிரியர்) காஞ்சியின் மதிள், காவல், கடைத்தெருக்கள், பல்வேறு தொழிலாளர் வசிக்கும் இடங்கள், இசை வல்லார் வாழ்ந்து வந்த இடங்கள், பொன்னும் மணியும் விற்கும் இடங்கள், நீர்த்துறைகள், பொது மண்டபங்கள், கவிஞர் கலந்துறையும் ஆலயங்கள், சோலைகள் முதலியவற்றின் அழகுகளை விரிவாகப் போற்றியுள்ளார்.

யுவான் சுவாங்க் என்ற சீன யாத்ரிகர் முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் (640 A. D.) காஞ்சிக்கு விஜயம் செய்திருந்தார். காஞ்சிபுரம் ஆறு மைல் சுற்றளவு இருந்த தாகக் கூறுகிறார். நகரம் செழிப்புற்றிருந்தது. நூற்றுக் கணக்கான பௌத்தப் பள்ளிகள் காஞ்சியில் இருந்தன. அவற்றில் ஆயிரக்கணக்கான புத்த பிக்ஷுக்கள் வசித்து வந் தார்கள். அவர்கள் மகாயான புத்தத்தைத் தழுவியவரா யிருந்தனர். திகம்பர சமணர்கள் பலரும் காஞ்சியில் இருந் தனர். இந்துமதக் கோயில்கள் பலவும் இருந்தன. நாலந்தா சர்வகலாசாலைப் பேராசிரியராயிருந்த தர்மபாலர் காஞ்சி புரத்தில் பிறந்தார் என்றும் அவர் கூறுவர். அசோகருடைய 100 அடி கொண்ட தூபி ஒன்றும் காஞ்சியில் இருந்ததாகக் கூறுகிறார்கள். காஞ்சிபுரம் நாலு, ஐந்தாம் நூற்றாண்டுகளில் பௌத்த, சமண மதங்களின் கோட்டையாயிருந்தது. மகேந் திர வர்மன் என்ற பல்லவ அரசன் அப்பர் சுவாமிகள் காலத் தவன். 'அவன் மத்த விலாசம்' என்ற வடமொழி நூலொன்று இயற்றியுள்ளான். பௌத்தம், கபாலிக சைவம், பாசுபத சைவம் ஆகிய மதங்கள் அக்காலத்தில் க்ஷீண தசை யடைந்திருந்ததாக அந் நூலால் அறியப்படு கிறது. அரசன் ஹாஸ்யமாக ஒவ்வொரு மதத்தவரையும் நையாண்டி செய்வது படித்தின்புறத் தக்கதா யுள்ளது.

பல்லவர் காலத்தில் சிற்பமும் ஓவியமும் சிறந்திருந்தன. கற்கோயில் கட்டும் வழக்கம் பல்லவர் காலத்தில்தான் முதன்முதலில் ஏற்பட்டது. காஞ்சிக்கும் கடலுக்கும் உவமை கூற வந்த ஒரு புலவர் கடலினும் காஞ்சி சிறந்தது என்கிறார். கடலில் விளைவன எல்லாம் காஞ்சியில் உண்டு; ஆனால் காஞ்சியில் உள்ளவெல்லாம் கடலில் கிடையாது. இக் கருத்துக் கொண்ட பாடல் பின்வருமாறு :

'' மலி தேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையால் ஒக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல் படாஅ
கச்சி கடல்படுவ எல்லாம் படும்.''

# விஷ்ணு காஞ்சி

## யதோத்காரி பெருமாள்

''ஆடவர்கள் எவ்வாறு அகல்வர்
அணி வெஃகாவும்
பாடகமும் ஊரகமும்
பஞ்சரமா—நீடிய மால்
நின்றான், இருந்தான், கிடந்
தானிது வன்றோ
மன்றார் பொழில்கச்சி மாண்பு.''

என்று, திருமால் கோயில் கொண்டுள்ளதால் மக்கள் காஞ்சியை விரும்புவதாக ஒரு புலவர் கூறுகிறார். இப் பாடல் குறிப்பிடும் திருப்பதிகள் மூன்று. அவை வெஃகா, பாடகம், ஊரகம் என்பவை. திருமழிசையாழ்வார் கி. பி. ஆறும் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் இம் மூன்று திருப்பதிகளை ஒன்றுசேரப் பாடி யிருக்கிறார். அப் பாடல்கள் பின்வருமாறு.

'' குன்றிருந்த மாட நீடு
பாடகத்தும் ஊரகத்தும்
நின்றிருந்து வெஃகணைக்
கிடந்தது என்ன நீர்மையே?''

திருச்சந்த விருத்தம் 63

என்றும்,

'' நின்றதெந்தை ஊரகத்து
இருந்தது எந்தை பாடகத்து
அன்று வெஃகணைக் கிடந்தது
என்னிலாத முன்னெலாம் ''

திருச்சந்த விருத்தம் 64

என்றும் பாடியிருக்கிறார். காஞ்சிக் கோயில்களில் மிகப் பழைமையானது திருவெஃகா. பத்துப் பாட்டுள், பெரும்

பாணாற்றுப் படையின் ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார், நகர எல்லையில் பாம்பணைமேல் பள்ளி கொண் டிருக்கும் பெருமானை,

" நாடுபல கழிந்த பின்றை நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்குப்
பாம்பணைப் பள்ளி அமர்ந்தோனாங்கண் "

என்று பாடியுள்ளார். இச் சங்கப் பாடலின் காலம் கி. பி. முதலாம் நூற்றாண்டெபர். எனவே இலக்கியப் பெருமை வாய்ந்த இத் திருப்பதி மிகப் பழைமையானது.

வேகவதியில் பெரு வெள்ளம் வந்தபோது எம்பெருமான் பள்ளி வளர்ந்து அணையாகி வெள்ளத்தைத் தடுத்தார் என்பர். இதன் பொருட்டே வெஃகணை அல்லது திருவெஃகா என்று இத் தலம் பெயர் பெற்றது. திருமழிசையாழ்வா ரிடம், (காஞ்சி) பல்லவ மன்னன் ஒரு பாடல் பெற விரும் பினான். ஆழ்வார் திருமாலை யன்றிப் பிறரைப் பாடாத வராதலால், அவருடைய சீடன் கணிகண்ணனிடமிருந்தா வது ஒரு பாடல் பெற விரும்பினான். கணிகண்ணன் மறுக்கவே, அவனைத் தேசப்பிரஷ்டம் செய்தான். சிஷ்யனுக்கு நேர்ந்ததை அறிந்த ஆழ்வார் அவ் வூர்ப் பெருமாளை, 'நீயும் உன்னுடைய பாயைச் சுருட்டிக் கொள்' என்று பொருள்பட ஒரு பாடல் பாடினார். அவ்வாறே பெருமாளும் சேஷசய னத்தைச் சுருட்டிக்கொண்டு ஆழ்வாரோடு பின்தொடர்ந் தாராம். நடந்ததைக் கேட்ட அரசன், ஆழ்வாரிடம் விரைந்து ஓடிவந்து மன்னிப்பு வேண்டினான். உடனே சிஷ்யனும், குருவும் ஊர் திரும்பினார்கள். ஆழ்வார் பெருமாளை நோக்கி, 'நீயும் போய்ப் பாயை விரித்துக்கொள்' என்று திருப்பிப் பாட, பெருமான் செய்தன்ன வண்ணம் செய்தாராம். அன்றையிலிருந்து பெருமானுக்கு 'யதோத் காரி' அல்லது சொன்ன வண்ணம் செய்த பெருமாள் என்று பெயர் வழங்கிற் றென்பர். சைவராகிய குமர குருபர சுவாமிகள் இக் கதையால் வசீகரிக்கப்பட்டு, 'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப்பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலே;' என்று இப் பெருமாளைப் பாடியுள்ளார்.

இவ் வாலத்திலுள்ள பொய்கை யருகிலே பொய்கை யாழ்வார் தோன்றினர் என்று குருபரம்பரைகள் கூறுகின் றன. 'பாந்தட் பாழியில் பள்ளி விரும்பிய வேந்தன்' என்று திருமங்கை மன்னன் இப் பெருமாளைப் போற்றுகிறார். பேயாழ்வார், திருமழிசை பிரான், நம்மாழ்வார், பொய்கை யாழ்வார் ஆகியோரும் இப் பெருமாளைப் பாடியிருக் கின்றார்கள்.

## அஷ்ட புஜம்

திருவெஃகாவிற்கு அருகே 'அட்டபுயகரம்' என்ற கோயில் இருக்கிறது. பேயாழ்வாரும், திருமங்கை மன்னனும் இப் பெருமாளைப் பாடியுள்ளார்கள்.

'' செம்பொனிலங்கு வலங்கை வாளிசிலை
தண்டொடு சங்க மொள்வாள்
உம்பரிருசுடர் ஆழியொடு கேட்க
மொண்மலர் ''

(திருமங்கை மன்னன்)

என்ற எட்டு ஆயுதங்களைத் திருக்கரங்களில் தரித்துக் கஜேந் திராழ்வானை ரட்சிக்கிற திருக்கோலத்தோடு காட்சியளிக் கிறார் பெருமாள். 'தொட்ட படையெட்டும் தோலாத வென்றியான்' என்று இவரைப் போற்றுகிறார் பேயாழ்வார். தொண்டையர் கோனான வயிர மேகன் இப் பெருமாளை வணங்குவதைக் கண்ணால் கண்டார் திருமங்கை மன்னன். வேளுக்கை, விளக்கொளி கோயில் என்ற இரண்டு பெருமாள் கோயில்கள் சின்னக் காஞ்சியில் உள்ளன. அவை ஆழ்வார்கள் பாடல் பெற்றன.

## அத்தி கிரி

காஞ்சியின் சிறந்த ஆலயமே வரதராஜஸ்வாமி கோயில் தான். இதை அத்தி கிரி என்பார்கள். உயரமான கட்டுமலை மேல் நின்ற திருக்கோலத்தில் இருக்கிறார் வரதர். யாகப் புரிந்த பிரம்மனுக்குக் காட்சியளித்ததாக ஐதீகம். வாரண கிரி என்னும் நரசிங்கப் பெருமாள் சந்நிதி கீழே இருக்கிறது.

வாரணகிரியைச் சுற்றி வந்தால் பின்புறம் அத்தி கிரிக்குப் படிகள் செல்கின்றன. இந்தியாவிலுள்ள சிறந்த விக்ரகங் களுள் வரதர் விக்ரகம் மிகப் பெயர்பெற்றது. உற்சவ விக்ர கத்தின் முகத்தில் நிறைய வடுக்கள் இருக்கின்றன. இவை போரில் ஏற்பட்ட வடுக்கள் என்பர். வெண்கலச்சிலைத் துவார பாலகர்கள் சந்நிதி வெளியே இருபுறத்திலும் நிற்கிறார்கள். வெளிப் பிராகாரத்தில் பெருந்தேவித் தாயார் சந்நிதி யிருக்கிறது. தாயார் மிகுந்த வரப்ரஸாதி.

ஆலயம் சுமார் 1200 அடி நீளமும் 800 அடி அகலமும் கொண்டது. அச்சுதராயன் என்ற விஜயநகர அரசன் வரத ராஜப் பெருமாளுக்குப் பொன், வைர நகைகள் அளித்து 17 கிராமங்களையும் மானியமாக அளித்தான். அரசன் இங்கே துலாபார தானஞ் செய்ததாகவும் கூறப்படுகிறது. கிருஷ்ண தேவராயன் கி. பி. 1518இல் இங்கே விஜயஞ் செய்து புண்ணியகோடி விமானத்தில் கைங்கர்யங்கள் செய்தான் என்று கூறப்படுகிறது.

கோயிலின் ராஜ கோபுரத்தைத் தாண்டியதும் உயர மான தூண்களுடன் கூடிய நாலுகால் மண்டபங்களைக் காணலாம். இடப் பக்கத்திலே பிரசித்தி பெற்ற ரதி மன் மதர்களோடு கூடிய நூற்றுக்கால் மண்டபம் அனந்தசரஸ் புஷ்கரணிக்கருகில் இருக்கிறது. ஒவ்வொரு தூணையும் சிறுசிறு சிற்பங்கள் அழகு செய்கின்றன. இச் சிறு உருவங் களில் மிகச் சிறந்தவை, வேணுகோபாலன், நவநீத கிருஷ்ணன், ஆதிசேஷன் குடைபிடிக்கும் லட்சுமிநாராயண மூர்த்தி முதலியன ஆகும். குதிரைகளும், யாளிகளும் தூண்களில் ஒரே கல்லில் செய்யப்பட் டிருக்கின்றன. பக் கத்தில் இரணியவதம் தத்ரூபமாய் நடக்கிறது. ஒவ்வொரு தூணும் ஒரு கதை சொல்லுகிறது. கல்லுச் சங்கிலிகள் இங்கே அதிகமாகவும் வேலைப்பாடுடனும் முற்றுப்பெற்ற முழு நிலையில் அமைந்துள்ளன. இவை மண்டபத்தின் மூலை களில் தொங்குகின்றன.

மே மாதத்தில் வரதருடைய பிரம்மோற்சவம் மிக விசேஷ மாக நடைபெறும். கருடோற்சவத்திற்கும், ரதத்திற்கும் பல்லாயிரக்கணக்கான மக்கள் பிரம்மாவே இந்த உற்

சவத்தை முதன்முதலில் துவக்கினுரென்பர். பக்தர்களுக்கு வரங்கொடுக்கவே வரதராஜப் பெருமாள் எழுந்தருளி யிருக்கிறுர். பெருமாள் கோயில் வடகலை சந்நிதி. வாக னங்கள் பிரம்மாண்டமும் கம்பீரமும் பொருந்தியவை. புறப்பாடு அரச பவனிபோல் இருக்கும். கருடோற்சவத் தன்று கோபுர தரிசனம் விசேஷம். ராமாநுஜர், வரத ராஜப் பெருமாளின் அருளாலேயே வைஷ்ணவப் பிரச்சாரம் செய்தாரென்று குரு பரம்பரைகள் கூறுகின்றன. வேதாந்த தேசிகரும் அருளாளப் பெருமாள் அருள் பெற்றவர். ராமாநுஜருடைய ஆசாரியர்களுள் ஒருவரென்று கூறப்படும் திருக்கச்சி நம்பிகளும் வரதராஜரருளுக்கு இலக்கானவர். இவரோடு வரதராஜப் பெருமாள் முகமுகமாய்ப் பேசுவ துண்டென்றும் கூறப்படுகிறது. 'அத்தியூரான் புள்ளை யூர்வான்' என்று பூதத்தாழ்வார் வரதராஜரை மங்களா சாஸனம் செய்தருளுவர்.

## ஏகம்பம்

பெரிய காஞ்சியைச் சிவகாஞ்சி என்பார்கள். ஏகாம் பரேஸ்வரர் ஆலயம், காமாட்சியம்மன் கோயில், குமரக் கோட்டம் ஆகியன இங்கேதான் உள்ளன. ஏகாம்பரேஸ்வரர் ஆலயம் சைவக் கோட்டையாக இருந்து வந்தது. பல்லவர் காலத்தில் சிறியதாயிருந்த ஆலயம் இன்று மிகப் பெரியதாக 25 ஏக்கர் நிலத்தை ஆக்ரமித்துக்கொண் டிருக்கிறது. கோபுரம் மிகப் பெரியது. விஜயநகர அரசராகிய கிருஷ்ண தேவராயர் இதைக் கட்டுவித்தார். தேவார ஆசிரியர்களும் பட்டினத்தடிகளும் இந்தச் சைவக் கோட்டையைப் பாடிப் பலப்படுத்தி யிருக்கிறுர்கள்.

இங்குள்ள லிங்கம் பிருத்விலிங்கம் என்கிறுர்கள். ஏகம்பம் பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்று. கோயில் பிரம் மாண்டமான சுற்று மண்டபம் கொண்டது. கோயிற் சுவ ரொன்றில் சிவபெருமான் காமனை எரித்த காட்சியும் ஆலயத்தைப் புதுப்பித்த கரிகாலனுடைய உருவமும் காணப் படுகின்றன. ஆலயத்தின் பின்புறம் பெரிய மாமரம் ஒன் றிருக்கிறது. முன்னொரு காலத்தில் பார்வதி தவங்கிடந்த

போது சிவபெருமான் இந்த மாமரத்தின்கீழ்க் காட்சியளித்த தாகப் புராணங்கள் கூறுகின்றன. இறைவன் விரும்பிய பூசையை இறைவி மேற்கொண்டு பூசிக்க, அப்போது கம்பையாறு பெருகி வரவும், அம்பிகை தழுவக் குழைந் தமையயால் 'தழுவக் குழைந்த நாதர்' என்ற திரு நாமத்தோடு சிவபெருமான் இங்கே எழுந்தருளியுள்ளார். இங்குள்ள மாமரத்தடியிலிருந்தே கச்சியப்ப சிவாசாரியர் கந்த புராணத்தைப் பாடினரென்பர். 'காஞ்சி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி' என்று மாமரத்தடி யிலுள்ள சோமாஸ்கந்த மூர்த்தியை அவர் பாடியுள்ளார் என்கிறார்கள். ஆலயத்துக்கு அளிக்கப்பட்ட மானியங்களின் விவரங்களைப் பல கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

இத் தலத்தில் பிரமன் பூசித்த வெள்ளக் கம்பர், மாயவன் பூசித்த கள்ளக் கம்பர், உருத்திரன் பூசித்த நல்லக் கம்பர் ஆகியோர் எழுந்தருளியிருக்கின்றனர். சந்நிதிக்கு எதிராக உள்ள த்வஜஸ்தம்பத்துக்குமுன் சற்று அப்பால் திருக்கச்சி மயானம் என்ற திருக்கோயில் இருக்கிறது. தேவர் களைச் சமிதையாகக் கொண்டு சிவபெருமான் இங்கே யாகஞ் செய்ததாக ஐதீகம்.

ஏகம்பம் நால்வர் பாடல் பெற்ற தலம். ஏகம்பம் காண, சேர, தொழுதேத்த இடர் கெடும் என்கிறார் சம்பந்த மூர்த்தி சுவாமிகள்.

'' கருவார் கச்சித், திருவேகம்பத்
தொருவா வென்ன, மருவா வினையே''

என்பது சம்பந்தர் வாக்கு. மாலை வெண்மதி தோயும் மதிள் சூழ்ந்த கச்சியின் வீதிகளும், எழிலார் பொழில்களும் சம்பந்த சுவாமிகளை வசீகரித்தன. எனவே அவர்,

'' ஏரார் பூங்கச்சி ஏகம்பனை யெம்மானைச்
சேராதார் இன்பமாயன நெறிசேராரே''

என்கிறார்.

ஏகம்பன் எப்போதும் இனிமையானவன். எனவே, 'எப்போதும் இனியானை என் மனத்தேனை' என்கிறார் சுவாமிகள்.

ஆட்சி ஆகியவற்றைப்பற்றிய குறிப்புக்கள் சுவரிலும் தரை யிலும் இக் குன்றில் பொறிக்கப்பட்டுள்ளன.

ஊருக்கு மத்தியில் இந்திர கிரிக்குச் செல்லும் வழியில் கல்யாணி தீர்த்தம் உள்ளது. குளத்தைச் சுற்றி நான்கு புறமும் மதிள் சுவர்கள் கட்டப்பட் டிருக்கின்றன. வாயில் களைப் பெரிய கோபுரங்கள் அலங்கரிக்கின்றன. இந்தக் குளம் சிக்க தேவராஜனால் வெட்டப்பட்டது என்று குளத் தினருகே உள்ள மண்டபத்தில் பொறிக்கப்பட்ட சாஸனம் கூறுகிறது. அன்னையன் என்ற மந்திரியின் வேண்டுகோளின் படி சிக்க தேவராஜன் இந்தக் குளத்தை வெட்ட ஏற்பாடு செய்தானென்றும் அது கட்டி முடிவதற்குள் அவன் இறக் கவும், அவனுடைய பேரனை கிருஷ்ணராஜ உடையார் காலத்தில் அது கட்டி முடிந்ததென்றும், அனந்த கவி என்ற புலவன் கோமடேசுவரர் சரிதம் என்னும் நூலில் எழுதி யுள்ளான். மிகப் பழைய சாஸனங்களிலேயே இப் பொய் கையைக் கொண்டு ஊர் சரவணபெளி குளம் என்று அழைக் கப்பட்டதாகத் தெரிவதால், ஜீரணமாயிருந்த குளத்தைச் சிக்க தேவராஜன் ஜீர்ணோத்தாரணம் செய்தான் என்று ஊகிக்க வேண்டி யிருக்கிறது.

இரண்டு குன்றுகளில் பெரிய குன்றுக்கு இந்திர கிரி என்று பெயர். சமவெளிக்கு 470 அடி உயரத்திலும் கடல் மட்டத் திற்கு 3347 அடி உயரத்திலும் குன்று இருக்கிறது. சுமார் ஐந்நூறு படிக்கட்டுகள் மலையுச்சிக்குச் செல்லுகின்றன. அடிவாரத்தின் படிக்கட்டுகள் ஆரம்பமாகும் இடத்திற் கருகில் ஒரு சிறிய சந்நிதி இருக்கிறது. சந்நிதியின் மேல் மாடத்தில் பார்சுவ நாதர் சிலையும் கீழே பிரம்மதேவர் சிலை ஒன்றும் இருக்கின்றன. குன்றின்மேல் பலத்த கற்சுவரால் சூழப்பட்ட இடத்தில் பல பழைமையான கட்டிடங்கள் உள்ளன. உள்ளே பிரவேசித்ததும் நம்முடைய கண்ணில் படுவது இருபத்து நான்கு தீர்த்தங்கரர் இருக்கை (சௌவீச தீர்த்தங்கர பஸ்தி). சிறிய கோயிலும் அதற்குள் கர்ப்பக் கிருகமும் சுகநாசியும் உள்ளன. வரிசையாக நிற்கும் உருவச் சிலைகளில் அதற்குச் சற்றுமேலே உட்கார்ந்த வண்ணம்

இருபத்தொரு தீர்த்தங்கரர் உருவச் சிலைகளும் காணப்படு கின்றன. கி. பி. 1648இல் சாருகீர்த்தி பண்டித தர்ம சந்திரர் என்பவரால் இந்தக் கைங்கரியம் செய்யப்பட்டது என்று தெரிகிறது. 'சௌவீச தீர்த்தங்கரர் பஸ்தி'க்கு வடமேற்கே சிறிது தூரத்தில் சென்னண்ணனின் பஸ்தி இருக்கிறது. சந்திரநாதர் என்ற எட்டாவது தீர்த்தங்கரர் உருவச் சிலை இருந்த திருக்கோலத்தில் உள்ளே காணப்படு கிறது. இந்த ஆலயம் சென்னண்ணனால் 1673இல் கட்டப் பட்டது. பக்கத்தில் கொஞ்சம் உயரமாக மாடத்தின்மேல் அமைக்கப்பட்ட கோயிலை ஒடகெல் பஸ்தி என்பர். மேலேறிச் செல்லப் படிக்கட்டுகள் உண்டு. உள்ளே மூன்று உள்ளறைகள் மூன்று பக்கமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. 'மூன்று உள்ளறைகளுக்கும் பொதுவாக ஒரே நவரங்கமும் முகமண்டபமும் கட்டப்பட் டிருக்கின்றன. நடுவேயுள்ள அறையில் ஆதிநாதர் உருவச் சிலை உள்ளது. உலக சக்கர வர்த்திகளுள் முதல் ஜைனர் ஆதிநாதர். அவர் கோமடரின் தகப்பனார் ஆவார்.

கோமடேசுவரருக்கு எதிராக வெளி முற்றத்தில் வேலைப் பாடு அமைந்த தியாகப்பிரம்ம தேவர் தூண் நிற்கிறது. ஒரு கைக்குட்டை கீழே நுழைந்து மறுபுறம் செல்லும்படியாக இந்தக் கம்பம் நிறுத்தப்பட்டிருப்பது சிற்பியின் திறமையைக் காண்பிக்கும். இந்த இடத்தில் நன்கொடைகள் அளிக்கப் பட்டு வந்ததால் இதற்குத் தியாகப் பிரம்ம கம்பம் என்று பெயர் உண்டாயிற்று என்பர். இந்தக் கம்பம் சாமுண்டி ராயருடையது என்று அங்குள்ள சாஸனம் கூறுகிறது.

கோமடேசுவரர் சிலை உள்ள முற்றத்திற்குச் செல்லும் வாயிலுக்கு அகண்டத் துவாரம் என்று பெயர். வாயிலின் பெரும்பகுதி ஒரே கல்லில் குடையப்பட்டது. வாயிற்படியின் மேற்புறத்தில் கஜலக்ஷ்மியின் உருவச் சிலை காணப்படுகிறது. இரண்டு புறங்களிலும் இரண்டு வாயில் காப்பாளர் சிலைகள் நிற்கின்றன. உள் முற்றத்தில் கோமடேசுவரர் சிலையைப் பார்த்த வண்ணம் ஐந்து அடி உயரமுள்ள ஒரு பெண் உரு வச் சிலை நிற்கிறது. அவ் வுருவம் குல்லகாயஜி என்றவளுடை யது என்பர். கையில் குல்லகாயை ஏந்திய வண்ணம் அது

நிற்கிறது. இந்த சிலையைப்பற்றி ரசமான ஒரு கதை வழங்குகிறது. சாமுண்டிராயர் மிகுந்த பொருட் செலவிலும் அதிக முஸ்தீபுகளுடனும் கோமடேசுவரர் சிலைக்கு அபிஷேகம் ஏற்பாடு செய்தார். அபிஷேகம் நடந்தபோது பால், சிலையில் துடை அளவில்தான் நின்றது. ஆனால் குல்லகாயில் ஒரு கிழவி கொண்டுவந்த பாலை அபிஷேகம் செய்தபோது பால் காலளவும் வடிந்து குன்றெல்லாம் பரவிற்று என்று கூறுவர். சாமுண்டிராயர் கர்வத்தை அடக்கப் பத்மாவதியே ஒரு கிழவி வடிவம் பூண்டு குல்லகாயில் பால் கொண்டுவந்தாள் என்பர். ஒரு சாரார் அச் சிலை குஷ்மந்தினியுடையது என்பர்.

கோமடேசுவரரைப் பற்றிய வரலாறுகள் புஜபலி சகடா, புஜபலி சரிதா முதலிய இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கின்றன. சிலா சாஸனம் ஒன்றில் கோமடேசுவரரின் வரலாறு பின்வருமாறு காணப்படுகிறது. கோமடரின் பெயர் புஜபலி என்பது. அவருக்குப் பரதன் என்ற தமையன் ஒருவன் இருந்தான். இருவரும் புரதேவரின் புதல்வர்கள், சகோதரர் இருவருக்கும் ராஜ்யத்திற்கு ஏற்பட்ட போரில் பாஹுபலி வெற்றி பெற்றான், ஆனால் பெருந்தன்மையோடு தன் தமையனுக்கு ராஜ்யத்தை அளித்துவிட்டுத் தவஞ் செய்யக் காட்டுக்குச் சென்று விட்டான். பாஹுபலி கர்மத்தை வென்று "கேவலி" யானன். சமணரின் முதல் தீர்த்தங்கரர் இவரே. இவருடைய தமையன் பரதன் பண்டனபுரத்தில் இவரைப்போல உருவச் சிலை ஒன்று செய்து வைத்தான். நாளடைவில் சிலையைச் சுற்றிக் காடுகள் வளர்ந்து சர்ப்பங்கள் மிகுந்து உபாசிப்பாருக்கன்றிச் சிலை பிறருக்குப் புலப்படாத தாயிற்று. சாமுண்டிராயர் இந்தச் சிலையைச் செய்து வைக்க ஏற்பாடு செய்தார். அரிஷ்ட நேமியின் உதவியைக் கொண்டு கோமடேசுவரரின் சிலையைச் சந்திரகிரியில் செய்து வைத்தார்.

சாமுண்டிராயன், கங்க அரசன் ராஜ மல்லனுடைய அமைச்சன். ராஜ மல்லனுடைய ஆட்சி கி. பி. 974—984 வரை ஆகும். ஆனால் 978இல் இயற்றப்பட்ட சாமுண்டிராய புராணத்தில் இச் சிலைத் திருப்பணியைப்பற்றிய குறிப்பு

ஒன்றுமே இல்லை. முக்கியமான செய்தி யொன்றை அந்தப் புராண ஆசிரியர் விடுத்திருக்கக் காரணம் இல்லை. எனவே, இச் சிலை 978க்குப் பிறகு 984க்கு முன்பு திருப்பணி செய்யப் பட்டிருக்க வேண்டும்.

கோமடேசுவரர் சிலை நிர்வாணமாக நிற்கிறது. வடக்கு நோக்கிப் பார்த்த வண்ணமாகச் சிலை உள்ளது. தோள்கள் அகன்று இடை சிறுத்துச் சிலை காணப்படுகிறது. கைகள் முழங்கால் அளவுக்குத் தொங்குகின்றன. கால்கள் மாத் திரம் குட்டையாகவும் தடிப்பாகவும் உள்ளன. துடைக்கு மேல் சிலை ஆதார மில்லாமலே தனித்து நிற்கிறது. பாதத்தி லிருந்து துடையளவுக்கு எறும்புப்புற்று இருப்பதுபோல் சுற்றிச் செதுக்கப்பட்டிருக்கிறது. புற்றிலிருந்து பாம்புகளும் ஒரு கொடியும் வெளிப்படுவது காண்கிறது. கொடி இரண்டு கால்களையும் சுற்றிக்கொண்டு முழங்கைகள் அளவுக்குச் செல்கிறது. சிலை, மலர்ந்த தாமரைமேல் நிற்பதுபோல் செதுக்கப் பட்டுள்ளது. 'மலர்மிசை ஏகினன்' என்ற குறள் அடிகளை நினைவூட்டுகிறது. சாம்பல் நிறமான வெள்ளைக் கல்லில் சிலை செய்யப்பட்டுள்ளது.

சிலை பார்ப்பதற்குச் சிற்பியின் கையினின்றும் இப் பொழுதுதான் வெளிவந்ததுபோல் காண்கிறது. மலைமேல் இருந்த ஒரு கல்லிலேயே சிலை செதுக்கப்பட் டிருக்கவேண்டும். ஏனென்றால் அவ்வளவு பெரிய கல்லை மேலே எடுத்துச் செல் வது மிகக் கடினமான காரியமாகும். உலகத்திலுள்ள ஒரே கல்லால் செய்யப்பட்ட எல்லாச் சிலைகளிலும் கோமடேசு வரர் சிலை பெரியது. எகிப்திலுள்ள ராமசீஸ் சிலையைவிட உருவத்திலும் அழகிலும் கோமடேசுவரர் சிலை சிறந்தது. கன்னட தேசத்திலேயே கார்கலாவிலும் ஏனூரிலும் உள்ள கோமடேசுவரர் சிலைகளைவிட இது பெரியதாகும். இதன் உயரம் 57 அடி; தோள்பட்டை அகலம் 26 அடி.

சிலை மிகுந்த வேலைப்பாடு அமைந்தது. முகத்திலே தீக்ஷண்யமும் தவக் களையும் பொலிந்து தோன்றுகின்றன. ஜைனருடைய துறவின் முழுக்கோலமும் சிலையில் காண்கிறது. சிலையில் நிர்வாணக் கோலம் பூரணத் துறவைக் காட்டும்; நிமிர்வும் கம்பீரமும் தன்னடக்கத்தையும் புலனடக்கத்தை

யும் காண்பிக்கும். முகத்தின் புன்முறுவல் ஆன்றவிந்தடங்கிய தன்மையைக் காட்டும். உடற் கூற்றில் சில குற்றங்கள் காணப்படினும், சிலை மொத்தத்தில் ஒரு சிறந்த சிற்பச் செல் வம் எனலாம். கோமடன் என்பதற்குச் சந்தோஷிக்கச் செய்கின்றவன் என்பது பொருள். வேண்டுதல் வேண்டாமை, இருள் சேர் இரு வினையும் சேராமை, பொறிவாயில் ஐந்தவித் தல் ஆகியவற்றை உலகினருக்கு உணர்த்திய வண்ணம் இச் சிலை நிற்கிறது. இந்த மூர்த்தியைத் தரிசிக்க வரும் பக்தர்கள் ஆத்ம சக்தியையும் அடைவார்கள் என்பது துணிவு.

இந்த மூர்த்திக்குப் பல ஆண்டுகளுக்கு ஒரு முறை மிகுந்த பொருட் செலவில் அபிஷேகம் நடைபெறும். அதைக் காண இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் ஆயிரக் கணக்கான சமண யாத்ரிகர்கள் வருவார்கள். தண்ணீர், இளநீர், வாழைப்பழம், சர்க்கரை, நெய், பால், தயிர், சந்தனம், பொன், பூ, பேரீச்சை முதலியவற்றைக் கலந்து மஞ்சனம் ஆட்டுவார்கள். பெரிய சாரங்கள் கட்டித் திருமஞ்சன உற்சவத்தை நடத்துவார்கள். கோமடேசுவரரின் இருபுறங் களிலும் யக்ஷன், யக்ஷிணி சாமரை வீசிக்கொண்டு நிற்கிறார் கள். இவ் வுருவங்கள் இரண்டும் சுமார் ஆறு அடி உயரம் உள்ளன. திருமஞ்சன தீர்த்தம் இடப் பக்கத்திலுள்ள லலித சரோவரம் என்ற தொட்டியில் விழும். கோமடேசுவரருக்கு முன்னால் உள்ள மண்டபத்தின் அடித்தளத்தில் அஷ்டதிக்குப் பாலகர்களுடைய உருவச் சிலைகள் காண்கின்றன. சாமுண்டி ராயனுடைய கல்வெட்டு ஒன்று, கோமடேசுவரரைச் சுற்றி யுள்ள முற்றம் விஷ்ணுவர்த்தனன் என்ற ஹொய்சள மன்ன னுடைய சேனைத் தலைவனாகிய கங்கராஜனால் திருப்பணி செய்யப்பட்டது என்று கூறுகிறது.

சிறிய குன்று சந்திரகிரி என்று கூறப்படுகிறது. கடல் மட்டத்திற்குச் சுமார் 3100 அடி உயரத்தில் இருக்கிறது. இந்த மலைமேலுள்ள எல்லாக் கோயில்களும் தென்னாட்டுக் கோயில் முறையில் கட்டப்பட்டுள்ளன. ஏறக்குறைய 13 கோயில்கள் மதிள் சுவரால் சூழப்பட்ட எல்லைக்குள் அடங்கி யிருக்கின்றன. ஒரே ஒரு கோயில்தான் வெளிப்புறத்தில் இருக்கிறது. பத்ரபாஹு குகைக் கோயில் என்று வெளிப்

புறத்தில் உள்ள குகையில் பத்ரபாஹுவின் பாதங்கள் வைத்து வணங்கப்படுகின்றன. பத்ரபாஹு சமணக் கூட்டத்தார் பலருடன் இங்கே வந்து குடியேறினர் என்று கர்ண பரம்பரை வரலாறுகள் கூறுகின்றன. சந்திரகுப்த மௌரியரும் ராஜ்ய பாரத்தைத் துறந்து அவருடன் சரவணபெளிகுளத்திற்கு வந்தாரென்றும் கூறுவர். பத்ரபாஹுவுக்கு அந்தியகாலம் நெருங்கவும் தாம் மாத்திரம் இங்கே தங்கித் தம் ஜீவயாத்திரையை முடித்தாரென்றும் கூறுவர். சந்திரகுப்த மௌரியர் குருவின் கடைசிக் காலத்தில் அவருடன் கூடவே இருந்தார். நெடுநாள் அங்கேயே தங்கியிருந்து அவர் பாத படிமங்களைத் தரிசித்துக் கொண்டிருந்து முடிவில் சமணருடைய விதிப்பிரகாரம் பட்டினி இருந்து தம்முடைய வாழ்நாளை முடித்தார்.

பிராகாரத்திற்கு வெளியே தெற்கு வாயிலின் முன்னல் ஒரு தூண் நிற்கிறது. இதன்மேலே பிரம்மதேவர் உருவம் காண்கிறது. தூணைத் தாங்கியவாறு எட்டுத்திசை யானைகள் எட்டுத் திசைகளை நோக்கியவண்ணம் செதுக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் தூணுக்கு மேற்கே சாந்திநாதர், பரதேசுவரர் முதலியோர் ஆலயங்கள் உள்ளன. பார்சுவநாதர் ஆலயத்திற்கு முன்னல் ஒரு மானஸ்தம்பம் நிற்கிறது. பத்மாவதி, குஷ்மந்தினி, யக்ஷன், குதிரை வீரன் முதலியோருடைய சிலைகள் நான்கு பக்கம் நோக்கிய வண்ணமாக ஸ்தம்பத்தின் நாலுபுறங்களிலும் காணப்படுகின்றன. சிக்கதேவராய உடையார் (கி. பி. 1672-1704) காலத்தில் புட்டையன் என்ற வியாபாரி ஒருவன் இந்த ஸ்தம்பத்தைத் திருப்பணி செய்தான். சந்திரகிரியில் வேலைப்பாடமைந்த மண்டபங்களும் தீர்த்தங்களும் உள்ளன.

சந்திரகிரியிலுள்ள பஸ்திகளில் எல்லாவற்றையும்விட மிகப் பெரியதும் அழகு வாய்ந்ததுமாய் விளங்குவது சாமுண்டிராய பஸ்தி. கர்ப்பக்கிருகம், சிறந்த சுகநாசி, நவரங்கம், பக்கங்களில் முற்றம் முதலியன உடையதாய் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரராகிய நேமிநாதருக்கெனக் கட்டப்பட்டது இவ் வாலயம். நேமிநாதருடைய யக்ஷன் யக்ஷிணிகளாகிய சரவணர், குஷ்மந்தினி இவர்களுடைய

சிலைகள் சுகநாசியில் உள்ளன. ஹொய்சளர்களுடைய சிற்ப வேலைகள் இங்கே நிரம்பவும் காணப்படுகின்றன.

சரவணபெளி குளக் கிராமம், சந்திரகிரி, இந்திரகிரி என்ற இரண்டு குன்றுகளுக்கிடையே உள்ளது. மைசூர் சமஸ்தானத்திலே செப்பு, பித்தளைப் பாத்திரங்கள் செய்வதற்கென இவ் வூர் பெயர் பெற்றுள்ளது. பக்கத்திலுள்ள அக்கண்ண பஸ்தி ஹொய்சளருடைய வேலைப்பாட்டைக் காண்பிக்கும்.

சமணர்களுடைய மடம் ஒன்று கிராமத்தில் இருக்கிறது. அது மிகுந்த வேலைப்பாட்டுடன் பெரிய முற்றம் முதலியவற்ருேடு கூடி விளங்குகிறது. தூண்கள் சிற்பத்திறன் பொலிந்தவையாகக் காண்கின்றன. செம்பு, சலவைக்கல் முதலியவற்ருல் செய்யப்பட்ட பல விக்கிரகங்கள் இங்கே உள்ளன. அவைகளுக்குப் பூசை உண்டு. சமணருடைய குரு இங்கே வசிக்கிருர்.

சரவணபெளி குளத்திலிருந்து சிறிது தூரத்தில் ஹேலபெளி குளம், ஜினநாதபுரம், கமாதஹள்ளி முதலிய கிராமங்கள் உள்ளன. சமணசமய சம்பந்தமான பல கல்வெட்டுக்கள் இங்கே உள்ளன. சமணர்கள் இந்த ஊர்களுக்கும் யாத்திரை செய்கிருர்கள்.

---

## எம் நூல்நிலைய வெளியீடுகள்

**ரவீந்தரநாத் தாகூர் :**

*(த. நா. குமாரஸ்வாமி) :*

| | ரூ. | பை. |
|---|---|---|
| கோரா | 10 | 00 |
| புயல் | 7 | 00 |
| சிதைந்த கூடு | 1 | 50 |
| கொஞ்ச நேரம் | 2 | 00 |
| முகுடம் (நாடகம்) | 0 | 75 |
| ராஜரிஷி | 3 | 00 |
| பூந்தோட்டம் | 2 | 00 |
| ஜப்பான் பயணம் | 1 | 50 |

**த. நா. குமாரஸ்வாமி :**

| | | |
|---|---|---|
| மயூராட்சி | 4 | 50 |
| கபாலகுண்டலா | 2 | 75 |
| கிழக்கோடும் நதி | 2 | 50 |
| மால்கோஷ் | 4 | 25 |
| கற்பவல்லி | 2 | 30 |
| விடுதலை | 2 | 00 |

**' கிருஷ்ணா ' :**

| | | |
|---|---|---|
| மதுக்கிண்ணம் | 6 | 00 |
| சந்தனமரம் | 5 | 25 |
| கால வெள்ளம் | 4 | 00 |
| அந்திமாலை | 3 | 25 |
| ராஜி | 3 | 00 |
| சிங்காரவல்லி | 2 | 00 |

**ஐ. ரா. சுந்தரேசன் :**

| | | |
|---|---|---|
| பொன்னின் புன்னகை | 2 | 25 |
| இதயத்தில் எழுதாதே ! | 1 | 50 |

**உஷா ரகுநாதன் :** ரூ. பை.

| | | |
|---|---|---|
| விமானம் ஓட்டினேன்! | 2 | 00 |

**தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் :**

| | | |
|---|---|---|
| கலைஞன் கண்ட கடவுள் | 2 | 00 |
| பிள்ளையார் பட்டிப் பிள்ளையார் | 2 | 25 |

**லட்சுமி சுப்ரமணியம் :**

| | | |
|---|---|---|
| பிறந்த நாள் | 2 | 50 |
| எதிரொலி | 2 | 25 |

**பி. ஞானிநாதன் :**

| | | |
|---|---|---|
| நீதியின் வெற்றி (நாடகம்) | 1 | 00 |
| புயல் ,, | 1 | 00 |

**எம். பி. சுப்ரமணியம் :**

| | | |
|---|---|---|
| ரதோற்சவம் | 2 | 00 |
| தேக்கடி ராஜா | 2 | 00 |

**குயிலி ராஜேஸ்வரி :**

| | | |
|---|---|---|
| நிட்டிங் | 2 | 00 |
| ஒப்பனைக் கலை | 1 | 50 |

**' சோ ' :** *(நாடகங்கள்)*

| | | |
|---|---|---|
| மனம் ஒரு குரங்கு | 2 | 25 |
| ஸம்பவாமி யுகேயுகே | 2 | 20 |
| கோவாடிஸ் | 2 | 00 |

**கல்யாணசுந்தரம் :**

| | | |
|---|---|---|
| தவச்செல்வர்கள் வரலாறு | 6 | 00 |



**மங்கள நூலகம்**

நுங்கம்பாக்கம் :: சென்னை - 34